கரும்புலிகள்

# உயிராயுதம்

## பாகம் 1



சாவுக்கு தேதி குறிக்கும் சரித்திரங்கள்
கந்தகத்தை மேனியிற் கட்டிய சந்தனங்கள்
விடியலுக்காக வெளியில் வராத விக்கிரகங்கள்
உயிர்மூச்சை ஊதிவிடும் உயிராயுதங்கள்

"கரும்புலிகள்"

முதற் பதிப்பு: ஆவணி, 1996
உலகத்தமிழர் இயக்கம், கனடா.

மறு பதிப்பு : யூலை 5 1997
தமிழீழ விடுதலைப்புலிகளின்
அனைத்துலகச் செயலகம்

ஒளியச்சு
வடிவமைப்பு: உலகத்தமிழர் இயக்க பதிப்பகம்
1231 Ellesmere Road, Suite 202
Scarborough ON
Canada M1P 2X8
(416) 285 – 1947
(416) 461 – 5991

வெளியீடு: உலகத்தமிழர் இயக்கம், கனடா.



■ ■ ■

# நுழைவாயில்

**விடுதலைப் புலிகளின் "கரும்புலிகள்"**

1987ம் ஆண்டு தமிழீழத்தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்களால் உருவாக்கப்பட்டு, தமிழீழ மண்ணில் தவழவிடப்பட்ட "நெருப்புக்குழந்தைகள்" தான் கரும்புலிகள்.

சுமார் 10 வருடங்களின் பின் தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் தடைகளை அகற்றி போராட்டத்தை நகர்த்திச் செல்லும், கண்ணுக்குப் புலப்படாத மாபெரும் சக்தியாக கரும்புலிகள் வளர்ச்சி கண்டு வருகின்றனர்.

எமது இனத்தின் படை பலத்தை பலமடங்கு உயர்த்தி செல்லும் உயிராயுதங்களாக மனித உயிர்கள் இங்கு உருவாகின்றன.

ஆம்! விலைமதிப்பற்ற மனித உயிர் "உயிராயுதங்கள்" ஆக தமிழீழ மக்களினதும் மண்ணினதும் விடுதலைக்காக போர்க்களத்தில் அர்ப்பணிக்கப்படுகின்றன.

"தமிழீழ விடுதலைப்போரின் தடைநீக்கிகளாக" செயற்படுவோம் என்ற உறுதிப்பாட்டை தாரக மந்திரமாகக் கொண்டு செயற்பட்டுவரும் கரும்புலிகளின் தற்தியாகங்களும், சாதனைகளும் எமது போராட்ட வரலாற்றில் பொறிக்கப்பட வேண்டியவையாகும்.

இச் சிறு நூலானது கரும்புலிகளின் வரலாற்றுச் சுருக்கத்தையும் தியாகங்களையும் சாதனைகளையும் ஓரளவு விளக்கி நிற்கிறது. அத்துடன் கரும்புலிகளில் சிலர் தரையிலும் கடலிலும் நிகழ்த்திய அற்புதமான வீரச்செயல்களையும் அவர்கள் புரிந்த தற்தியாகங்களையும் உணர்வுபூர்வமாக வெளிப்படுத்துகின்றது.

தமிழீழ விடுதலைப்புலிகளின் உத்தியோகபூர்வ பத்திரிகையான 'விடுதலைப்புலிகள்' பத்திரிகையில் கரும்புலிகள் தொடர்பாக காலத்திற்கு காலம் வெளியாகியிருந்த கட்டுரைகளினது தொகுப்புடன் உலகத்தமிழர் பத்திரிகை, களத்தில் போன்ற பத்திரிகைகளிலும் கரும்புலிகள் பற்றி வெளியாகிய விடயங்களையும் உள்ளடக்கியதாக இந்நூல் அமைந்துள்ளது.

"விடுதலைப் புலிகளின் கரும்புலிகள்" பற்றிய இச் சிறப்புமலரை இற்றைவரை வீரச்சாவடைந்த அனைத்துக் கரும்புலிகளுக்கும் சமர்ப்பணம் செய்வதுடன், இச்சிறு தொகுப்பு எதிர்காலத்தில் கரும்புலிகள்' பற்றிய விரிவான ஆராய்வுக்கு உதவியாக அமையும் என நம்புகிறோம்.

**"தமிழினத்தின் தாகம் தமிழீழத் தாயகம்"**

அரசியல் பிரிவு,
உலகத்தமிழர் இயக்கம்
கனடா

# முதலாவது பெண் கடற்கரும்புலி

## வீரச்சாவு: 16.08.1994



*கரும்புலி கப்டன்*

## அங்கையற்கண்ணி

தமிழீழக் கடலிலே காவியம் படைத்து, கடலன்னையின் முதலாவது பெண் குழந்தை யாகிவிட்ட, கப்டன் அங்கையற் கண்ணியின் 2ம் ஆண்டு நினைவாக 'கரும்புலிகள்' என்ற 'உயிராயுதம்' சிறப்பு நூல் கனடா, உலகத்தமிழர் இயக்கத்தின் அரசியல் பிரிவினால் வெளியிட்டு வைக்கப்படுகிறது.

அரசியல் பிரிவு
உலகத்தமிழர் இயக்கம்
கனடா

# தெய்வப் பிறவிகள்தான் கரும்புலிகள்

பலவீனமான எமது மக்களின் மிகவும் பலம் வாய்ந்த ஆயுதமாகவே கரும்புலிகளை நான் உருவாக்கினேன். கரும்புலிகள் எமது இனத்தின் தற்காப்புக் கவசங்கள், எமது போராட்டப் பாதையின் தடை நீக்கிகள். எதிரியின் படை பலத்தை மனபலத்தால் உடைத்தெறியும் நெருப்பு மனிதர்கள்.

கரும்புலிகள் வித்தியாசமானவர்கள், அபூர்வமான பிறவிகள். இரும்பு போன்ற உறுதியும் பஞ்சு போன்ற நெஞ்சமும் கொண்டவர்கள். தங்களது அழிவில் மக்களது ஆக்கத்தை காணும் ஆழமான மக்கள் நேயம் படைத்தவர்கள்.

ஒரு கரும்புலிவீரன் தன்னை விட தனது இலட்சியத்தையே காதலிக்கிறான். தனது உயிரைவிட தான் வரித்துக் கொண்ட குறிக்கோளையே நேசிக்கிறான். அந்த குறிக்கோளை அடைவதற்கு தன்னை அழிக்கவும் அவன் தயாராக இருக்கிறான். அந்தக் குறிக்கோள் அவனது சுயத்திற்கு அப்பால் நிற்கும் மற்றவர்களின் நலன் பற்றியது, நல்வாழ்வு பற்றியது. மற்றவர்கள் இன்புற்று இருக்க வேண்டும் என்பதற்காக தன்னை இல்லாதொழிக்கத் துணிவது தெய்வீகத் துறவறம். அந்தத் தெய்வீகப் பிறவிகள் தான் கரும்புலிகள்.

ஒரு புனித யாத்திரையில் அவர்கள் போனார்கள். கண்ணீர் வடித்து நிற்கும் எமது மக்களுக்கு ஒரு புதிய வாழ்வு பிறக்கும் என்ற அசையாத நம்பிக்கையில் அந்தத் தியாகப் பயணத்தைத் தொடர்ந்தார்கள். அந்தப் புனிதர்களை எண்ணும் பொழுதெல்லாம் எனது நெஞ்சு புல்லரிக்கும்.

பல கரும்புலி வீரர்கள் இன்று பெயர் குறிப்பிடப் படாத கல்லறைகளில் அநாமதேயமாக உறங்கிய போதும் அவர்களது அற்புத சாதனைகள் வரலாற்றுக் காவியங்களாக என்றும் அழியாப் புகழ்பெற்று வாழும்.

'கரும்புலி' என்ற சொற்பதத்தில் கருமையை மனோதிடத்திற்கும், உறுதிப்பாட்டிற்குமே நாம் குறிப்பிடுகிறோம். இன்னொரு பரிமாணத்தில் இருளையும் அது குறியீடு செய்யும். பார்வைக்குப் புலப்படாத ஊடகமான, இரகசிமான தன்மையையும் செயற்பாட்டையும் அது குறித்து நிற்கும். எனவே 'கரும்புலி' என்ற சொல் பல அர்த்தங்களைக் குறிக்கும் ஆழமான படிவமாக அமையப் பெற்றிருக்கிறது.

முகத்தை மறைத்து, பெயரையும் புகழையும் வெறுத்து, இலட்சிய மூச்சாக தமிழீழ விடுதலைக் காற்றுடன் கலந்து விட்ட இந்த சரித்திர நாயகர்களை நான் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

*தமிழீழத் தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன்.*



தமிழீழத் தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன்
அவர்களின் அஞ்சலி

# கரும்புலிகள் உருவாக்கத்தின் பின்னணி

கரும்புலிகள்" என்ற வார்த்தைப் பிரயோகம் உலகளாவிய ரீதியில் ஒவ்வொருவராலும் பேசப்படும் சக்தி மிக்கதொரு சொற்பதமாகி விட்டது.

கரும்புலித் தாக்குதலை நடாத்தும் விடுதலைப்புலி உறுப்பினர்களின் பிரமிப்பூட்டும் தியாகங்கள், உலக சமுதாயத்தை அதிர்ச்சியிலும் வியப்பிலும் ஆழ்த்தி வருகின்றன. மனிதன் பிறந்ததே வாழ்வதற்காகத் தான். அப்படியானால் இறப்பதற்காகவே களம் புகும் இக்கரும்புலிகள் யார்? இவர்களது உருவாக்கத்தின் வரலாற்றுப் பின்னணி என்ன?

ஈடு இணையற்ற இவர்களது ஈகமும், மன ஓர்மமும் சமுதாயத்தில் ஏற்படுத்தும் தாக்கம் எத்தகையது என்பன போன்ற கேள்விகளுக்கான விடைகளானது மானிட ஆய்வாளர்கள் மத்தியில் ஆராய்ச்சிக்குரியனவாகிவிட்டன. இன்று, உலகெங்குமுள்ள அடக்குமுறை யாளர்கள் தங்களுக்குள் கைகோர்த்தபடி, சுதந்திரக் காற்றைச் சுவாசிக்க விழையும் மக்களை மிருகத்தனமாக அடக்கி ஒடுக்க முனைகின்றனர். இவர்களிடம் ஆள் - ஆயுத பலம் உண்டு. ஆட்சி அதிகாரம் உண்டு.



தொழில் நுட்பவலுவுண்டு. இவற்றைத் தேவைப்படும் இடங்களுக்கு, தேவைப்படும் நேரத்தில் கொடுத்து மாறி, போராட்ட சக்திகளைப் பலம் இழக்கச் செய்து, தங்களது அடக்கு முறைகளை வலுப்படுத்துகின்றனர். இந்த நவீன அடக்குமுறையாளர்களுக்கு ஈடு கொடுக்கக்கூடிய அளவுக்கு ஆள் - ஆயுத - தொழில் நுட்பத்திறன்களைப் போராட்ட சக்திகள் கொண்டிருப்பதில்லை.

மிகக் குறைந்த அளவில் இவர்களுக்கு இருக்கும் போராட்டத் திறன்களில் இருந்து மிக உச்சப் பயன்களைப் பெற்றாலொழிய, போராட்டச் சக்கரத்தை ஓர் எல்லைக்கு அப்பால் நகர்த்த முடியாது.

எனவே ஒடுக்கு முறையாளர்களின் நாடியை ஒடுங்கச் செய்யும் அளவுக்கு, பல்வேறு திசைகளிலிருந்தும் வெவ்வேறு வடிவங்களில் போர்ச்சக்கரம் நகர்த்தப்பட வேண்டும்.

இந்தப் போர் வடிவங்களுக்குள்ளேயே உயர்ந்ததும், உன்னதமானதுமான விடுதலைப்புலி களின் போர் வடிவம் தான் கரும்புலித் தாக்குதலாகும்.

தன்னை இழந்து எதிரிகளில் பலரை அல்லது எதிரியின் பலமிக்க தொரு இலக்கை அழிக்கக் கூடிய ஒரு படையணி ஒன்றை அமைக்கும் யோசனையை, தமிழீழத் தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் அவர்கள் ஆரம்பத்திலிருந்தே கொண்டிருந்தார்.

அந்த எண்ணக் கருவைச் செயற்படுத்தக்கூடிய ஆற்றலை விடுதலைப்புலி வீரர்கள் மத்தியில் சிறுகச் சிறுக ஏற்படுத்திக் கொண்டுவந்தார். பின்னர், 'ஒப்பரேசன் லிபரேசன்" என்ற பெயருடைய இராணுவ நடவடிக்கை மூலம் வடமராட்சிப் பகுதியை ஆக்கிரமித்த சிங்களப் படைகள் வெற்றிக் களிப்பில் ஆழ்ந்தன. இதன் மூலம் சிங்கள இராணுவத்திற்கு உளவியல் ரீதியான போரிடும் ஆற்றல் திடீரெனக் கூடியது. சிறீலங்கா அரசும், விடுதலைப்புலிகளை அழித்துவிடலாம் எனத் திமிருடன் சிந்திக்கத் தொடங்கியது.

இதே சமயம், அந்த இராணுவ நடவடிக்கை காரணமாக பெருமளவு மக்கள் இடம் பெயர்ந்து மற்றைய பகுதிகளுக்குச் சென்றதுடன், அந்தத் திடீர் நடவடிக்கையால் மக்கள் குழம்பியும் போராட்ட வெற்றியில் நம்பிக்கை இழக்கக் கூடிய சூழலும் தோன்றியது. இந்தச் சூழ்நிலைகளில்தான் ஒரு கரும்புலித் தாக்குதலை நடத்த தமிழீழத் தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் முடிவெடுத்து, அதற்கான ஆயத்தங் களைச் செய்தார்.

**1987 ஆம் ஆண்டு யூலை மாதம் 5ம் திகதி, நெல்லியடி மத்திய மகாவித்தியாலயத்தில் அமைக்கப்பட்டிருந்த சிங்கள இராணுவ முகாமிற்குள் முதலாவது கரும்புலி வீரன் புகுந்து, அம் முகாமைச் சின்னாபின்ன மாக்கினான்.**

1987 ஆம் ஆண்டு யூலை மாதம் 5ம் திகதி, நெல்லியடி மத்திய மகாவித்தியால யத்தில் அமைக்கப்பட்டிருந்த சிங்கள இராணுவ முகாமிற்குள் முதலாவது கரும்புலி வீரன் புகுந்து, அம் முகாமைச் சின்னா பின்னமாக்கினான்.

சிங்கள அரசையும், அதன் இராணுவ இயந்திரத்தையும் கிலிகொள்ளச் செய்த அந்த முதலாவது கரும்புலித் தாக்குதலை, கரும்புலி கப்டன் மில்லர் செய்து முடித்தான். அன்றிலிருந்து இன்றுவரை பல கரும்புலித் தாக்குதல்கள் நிகழ்த்தப்பட்டுவிட்டன. அதில் பல கரும்புலிகள் வீரச்சாவு அடைந்துள்ளனர்.

ஒவ்வொரு விடுதலைப்புலி வீரனும், வீராங்கனையும் சாவைச் சந்திக்கத் தயாரான நிலையில் தான் இருக்கின்றார்கள். ஆனால், தங்களுடைய சாவு எப்போது வரும் என்பது அவர்களுக்குத் தெரியாது.

போர்க்களத்திற்குச் செல்லும் போதுகூடத் திரும்பி வருவேன் என்ற நம்பிக்கையுடன் தான் ஒரு விடுதலைப்புலி வீரன் செல்கிறான். சிலவேளைகளில் அங்கே அவன் சாவைச் சந்திக்கலாம் அல்லது திரும்பி வரலாம்.

ஆனால் கரும்புலிகளின் நிலை வேறுபட்டது. களம் புகுவதற்குப் பல நாட்களின் முன்னமேயே தங்களது சாவைத் தெரிந்து கொண்டுவிடுகிறார்கள். அடுத்த நிமிடத்தில் சாகப்போகிறேன் என்ற உண்மையைப் பூரணமாகத் தெரிந்துகொண்டு தான், கரும்புலிகள் வெடிமருந்தைத் தங்களுடன் கொண்டு செல்கின்றார்கள்.

இராணுவ முகாமிற்குள் இருக்கும் பலநூறு எதிரிகளின் கரங்களிலிருந்து முழங்கிக்கொண்டிருக்கும் துப்பாக்கிகளைக் கருத்திலெடுக்காது, உடைந்து நொருங்கிப் போய்க் கிடக்கும் பாதை வழியே, சீராக - நிதானமாக - வெடிமருந்து வண்டியை ஓட்டிச்சென்று, எதிரி

முகாமின் இதயத்திற்குள்ளே புகுந்து, தன்னையும் சேர்த்து வெடிக்கச் செய்வதென்பது சாதாரண விடயமல்ல.

இயல்பாகவே அச்சமூட்டும் அலைகளைக் கொண்ட அகண்ட சமுத்திரத்துக்குள், நடு இரவில், எதிரியின் நவீன காவற் கருவிகளையும் புத்திசாதுரியமாக மீறி, வெடிமருந்துப் படகுடன் உட்புகுந்து எதிரியின் கப்பலை நெருங்கி, முன்னரே தீர்மானிக்கப்பட்ட இலக்கை இனம் காண்பதற்காக ஒருமுறை கப்பலைச் சுற்றிவந்து, குறித்த இலக்கின் மீது மோதி, வெடிமருந்துப் படகுடன் சேர்ந்து வெடித்துச் சிதற, ஒரு மனித மனம் உடன்படாது.

இவைகள் ஒரு சாதாரண வீரனால் செய்யப்பட முடியாதவை. இதைச் செய்வதற்கென்றொரு ஆத்மீக பலம் தேவை. தன்னை தற்கொடை செய்துகொள்ளத் தயாரான மனோதிடம் தேவை. தனது இறுதி நேரத்திலும் கூட பதற்றமின்றி, உறுதியுடன், குறிபிசகாது எதிரியைத் தேடி ஓடும் வீரம் தேவை. விரக்தி காரணமாகவோ, முட்டாள்தனமாகவோ தன்னை அழித்துக்கொள்ள முனையும் தற்கொலைமுயற்சியைப் போலல்ல இது. அல்லது எதிரியின் கண்ணோட்டத்தின்படி கொடூரம் மிக்கதும் மானிட இனமாக இல்லாததுமான ஒரு பூதம் அல்ல. இது அடிமைப்பட்டுக் கிடக்கும் ஒரு தேசிய இயக்க சக்திக்கு உந்து விசையாக விளங்கும் உயரிய போர் வடிவம்தான் எங்களது கரும்புலிகள்.

உலகின் எந்த ஆயுதங்களாலும் வெற்றி கொள்ளப்படமுடியாததும், உலகின் எந்தத் தொழில் நுட்பத்தாலும் தடுக்க முடியாததும், உலகின் எந்த அரச இயந்திரத்தாலும் அடக்க முடியாததும் தான் எங்களது கரும்புலிகளின் மனோபலம்.

**உலகின் எந்த ஆயுதங்களாலும் வெற்றி கொள்ளப்பட முடியாததும், உலகின் எந்தத் தொழில் நுட்பத்தாலும் தடுக்க முடியாததும், உலகின் எந்த அரச இயந்திரத்தாலும் அடக்க முடியாததும்தான் எங்களது கரும்புலிகளின் மனோபலம்.**

இந்த மனோபலம் ஒரு வீர உணர்வை வெளிப்படுத்தும் ஒரு குறியீடுமட்டுமல்ல, எமது சமுதாய எண்ண வோட்டத்தில் பிரளயத்தை ஏற்படுத்தப்போகும் சக்தி கொண்ட ஒரு மாபெரும் அரசியல் வடிவமு மாகும்.

ஒவ்வொரு கரும்புலியும் தனது உயிரைப் போக்கிக் கொள்ளும்போது நிகழும் பூகம்பம், தமிழீழ விடுதலைப் போராட்டச் சக்கரத்தை முன்னோக்கித் தள்ளிவிடுவதுடன் வீரம்மிக்க, யாருக் கும் அடிபணியாத, அடக்க நினைப்ப வரை நடுங்க வைக்கும் ஆற்றல் கொண்ட, தமிழ்ச் சமூகத்திற்குத் தேவையான உணர்வையும் ஊட்டி விடுகின்றது.

தேச பக்தியையும, வீர உணர்வையும் அடித்தளமாகக்கொண்ட இத்தகைய மனோபலம் எமது மக்களிடம் இருக்குமாக இருந்தால், உலகில் எவராலும் எம்மை எதுவும் செய்ய முடியா ததுடன், சுதந்திரத்துடனும் கௌரவத்துடனும் வாழும் பலத்தையும் நாம் பெற்றுக்கொள்ள முடியும்.

இன்று பல நூற்றுக்கணக்கான விடுதலைப்புலி வீரர்கள் தங்களைக் "கரும்புலி" அணியில் இணைத்துக் கொண்டிருக்கின்றனர்.

ஒவ்வொருமுறையும் கரும்புலித் தாக்குதலுக்கான திட்டம் தீட்டப்படும்போது, தன்னைத்தானே தேர்ந்தெடுக்க வேண்டுமென்று ஒவ்வொரு வீரனும் வீராங்கனையும் முண்டியடிக்கின்றார்கள்.

அலையலையாக கரும்புலித் தாக்குதலுக்குத் தயாராகும் இந்தத் தியாகச் செயலை, உலகில் எங்குமே காணமுடியாது.

இது உலக அதிசயங்களில் புதியதொன்றாகும்.

களம்புகும் கரும்புலிகளின் பிரமிப்பூட்டும் வீரச் சாதனைகள், சிங்கள ஆளும் வர்க்கத்துக்குக் கிலியை உண்டுபண்ணுகின்ற அதேசமயம், அந்த உன்னதமான அர்ப்பண உணர்வு எற்படுத்தும் சமூகத் தாக்கம், தமிழீழக் குடிமக்களின் மனதில் இருக்கும் சுதந்திர ஒளியை இன்னும் வளர்த்துச் செல்லும் என்பது உறுதி!

# கரும்புலிகள்



## “இவர்கள் விடுதலைப் பாதையின் தடை நீக்கிகள்”

- தமிழீழத் தேசியத் தலைவர்
**திரு. வே. பிரபாகரன்**

05-07-1993 அன்று, கரும்புலிகள் தினத்தை ஆரம்பித்து வைத்து தமிழீழத் தேசியத் தலைவர் திரு. வே. பிரபாகரன் விடுத்த அறிக்கை.

எனது அன்புக்குரியவர்களே!

கரும்புலிகள் நாளாகிய இன்றைய தினத்தில், கரும்புலி வீரர்களாகிய உங்கள் மத்தியில் கரும்புலிகள் பற்றிப் பேசுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததையிட்டு நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். ஆறு ஆண்டுகளுக்கு முன்பு, இன்றைய தினத்தில், முழு இலங்கைத் தீவையும் அதிரவைத்த ஒரு சம்பவம் நிகழ்ந்தது. எமது விடுதலை இயக்கத்தின் முதலாவது கரும்புலி வீரன் கப்டன் மில்லர் ஓர் ஒப்பற்ற சாதனையை நிலைநாட்டினான். எமது விடுதலை வரலாற்றில் என்றுமே நிகழாத ஓர் அதிசயம் அன்று நிகழ்ந்தது. எதிரியின் அசைக்க முடியாத கோட்டையாகத் திகழ்ந்த ஓர் இராணுவ முகாமை இந்த இளம்புலி வீரன், தனித்த ஒருவனாகச் சென்று தகர்த்தெறிந்தான். ஒரு பெரிய படை யணியாலும் செய்ய முடியாத பாரிய இராணுவ சாதனையை ஒரு தனிமனிதனாகச் சென்று இவன் சாதித்து முடித்தான்.



எரிமலையைச் சுமந்துசென்று எதிரியின் பாசறைக்குள் வெடிக்கவைத்தான். இந்தப் பூகம்ப மான தாக்குதல் நிகழ்வு அன்றைய வரலாற்றுச் சூழ்நிலையையே மாற்றியமைத்தது. எதிரியின் சைனியங்கள் நிலைகுலைந்து பின்வாங்கின. ஒரு பெரிய படையெடுப்பின் பேரழிவிலிருந்து யாழ்ப்பாணம் தப்பிக் கொண்டது. தனிமனிதனாக, எமது போராளி ஒருவன் தன்னை அழித்துத் தனது தேசத்தை பேரழிவிலிருந்து காப்பாற்றினான்.

முதன் முதலாக, எமது போராட்ட வரலாறு தியாகத்தின் அதியுன்னதமான ஒரு அற்புதத்தைப் பதிவு செய்துகொண்டது. அன்றிலிருந்து எமது போராட்ட மரபில் ஒரு புதிய அத்தியாயம் திறக்கப்பட்டது. என்றுமில்லாத வகையில் ஒரு புதிய போர் வடிவம் அறிமுகப்படுத்தப்பட்டது.

கப்டன் மில்லருடன் கரும்புலிகளின் சகாப்தம் ஆரம்பமாகியது. என்றுமே உலகம் கண்டிராத எண்ணிப் பார்க்கவும் முடியாத தியாகப் படையணி ஒன்று தமிழீழத்தில் உதயமாகியது.

கரும்புலி வீரர்களின் தோற்றமும், தற்கொடைப் படையாக அவர்களின் வளர்ச்சியும் எழுச்சி யும் மிகவும் நுட்பமான அவர்களின் போர்ச் சாதனைகளும் எமது போராட்டத்தின் ஒரு வரலாற்றுத் தேவையாகவே எழுந்தது.

***நாம் இன அழிவை எதிர் கொள்ளும் ஒரு சிறிய தேசிய சமுதாயம். எமக்குக் குரல் கொடுக் கவோ, கை கொடுக்கவோ உலகில் எவரும் இல்லை. நாம் தனித்து நிற்கிறோம். எமது சொந்தக் கால்களில் நிலைத்து நிற்கிறோம். பலம் வாய்ந்த எதிரிகள் எம்மைச் சூழ்ந்து நிற்கிறார்கள். எம்மை ஒழித்துக்கட்ட உறுதி பூண்டு நிற்கிறார்கள். முழு உலக முமே ஒன்று திரண்டு எமது எதிரிகளுக்கு முண்டுகொடுத்து வருகிறது.***

நாம் இன அழிவை எதிர்கொள்ளும் ஒரு சிறிய தேசிய சமுதாயம். எமக்குக் குரல் கொடுக்கவோ, கை கொடுக்கவோ உலகில் எவரும் இல்லை. நாம் தனித்து நிற்கிறோம். எமது சொந்தக் கால்களில் நிலைத்து நிற்கிறோம். பலம் வாய்ந்த எதிரிகள் எம்மைச் சூழ்ந்து நிற்கிறார்கள். எம்மை ஒழித்துக்கட்ட உறுதிபூண்டு நிற்கிறார்கள். முழு உலகமுமே ஒன்று திரண்டு எமது எதிரிகளுக்கு முண்டுகொடுத்து வருகிறது. இந்த இக்கட்டான, ஆபத்தான சூழ்நிலையில் நிர்க்கதியாக நிற்கும் ஒரு மக்கள் சமூகம் என்ற ரீதியில் நாம் எம் மாலான சகல வழிகளையும் கையாண்டு, எமது சக்திகள் அனைத்தையும் பிரயோகித்து ஒரு தற்காப்புப் போரை நிகழ்த்தவேண்டும். இந்தத் தேவையை, நிர்ப்பந்தத்தை நாம் அசட்டை செய்ய முடியாது. அல்லாத பட்சத்தில் நாம் இனவாரியாக அழிந்து போவதைத் தவிர்க்க முடியாது.

பலவீனமான எமது மக்களின் மிகவும் பலம்வாய்ந்த ஆயுதமாகவே கரும்புலிகளை நான் உருவாக்கினேன். கரும்புலிகள் எமது இனத்தின் தற்காப்புக் கவசங்கள், எமது போராட்டப் பாதையின் தடைநீக்கிகள். எதிரியின் படைபலத்தை மனபலத் தால் உடைத்தெறியும் நெருப்பு மனிதர்கள்.

கரும்புலிகள் வித்தியாசமானவர்கள், அபூர்வமான பிறவிகள். இரும்பு போன்ற உறுதியும் பஞ்சுபோன்ற நெஞ்சமும் கொண்டவர்கள். தங்களது அழிவில் மக்களது ஆக்கத்தைக் காணும் ஆழமான மக்கள் நேயம் படைத்தவர்கள்.

இந்த உலகில் வாழும் மனிதன் ஒவ்வொருவனும் எல்லாவற்றிற் கும் மேலாக தன்னையே காதலிக்கிறான். தனது உயிரையே நேசிக்கி றான். உயிர் வாழ வேண்டும் என்று துடிக்கிறான். மனிதன் உயிரை நேசிப்பதால், உயிர்வாழ விரும்புவதால் உயிர் அற்றுப்போகும் சாவு என்ற இல்லாமை நிலைக்கு பயப்படுகிறான். இது மனித இயல்பு. இயற்கையின் நியதி. ஆனால் ஒரு கரும்புலிவீரன் தன்னை விட தனது இலட்சியத்தையே காதலிக்கிறான். தனது உயிரைவிட தான் வரித்துக் கொண்ட குறிக்கோளையே நேசிக்கிறான். அந்த குறிக்கோளை அடைவதற்கு தன்னை அழிக்கவும் அவன் தயாராக இருக்கிறான். அந்தக் குறிக்கோள் அவனது சுயத்திற்கு அப்பால் நிற்கும் மற்றவர்களின் நலன்பற்றியது. நல்வாழ்வு பற்றியது. மற்றவர்கள் இன்புற்று இருக்கவேண்டும் என்பதற்காகத் தன்னை இல்லாதொழிக்கத் துணிவது தெய்வீகத் துறவறம். அந்தத் தெய்வீகப் பிறவிகள் தான் கரும்புலிகள்.

தேசிய விடுதலை என்ற உயரிய இலட்சியத்தைத் தழுவிக்கொள்ளும் ஒவ்வொருவனும் முதலில் தன்னை விடுதலை செய்து கொள்ளவேண்டும். தனது மனவுலக ஆசைகளிலிருந்தும் அச்சங்களிலிருந்தும் தன்னை விடுதலை செய்து கொள்பவன்தான் உண்மையில் விடுதலை வீரன் என்ற தகைமையைப் பெறமுடியும். மனமானது பயங்களிலிருந்து விடுதலை பெறும்போதுதான்

வீரம் தோன்றுகிறது. துணிவு பிறக்கிறது. இந்த மனவியல் உண்மையை நான் ஆரம்பத்திலிருந்தே எமது போராளிகளுக்கு எடுத்துரைத்து வருகிறேன். பயம் என்பது பலவீனத்தின் வெளிப்பாடு. கோழைத்தனத்தின் தோழன். உறுதிக்கு எதிரி. மனித பயங்களுக்கு எல்லாம் மூலமானது மரணபயம். இந்த மரணபயத்தைக் கொன்றுவிடுபவன் தான் தன்னை வென்று விடுகிறான். அவன்தான் தனது மனச்சிறையிலிருந்து விடுதலை பெறுகிறான். கரும்புலிகள் பயத்தின் வேர்களைப் பிடுங்கி எறிந்தவர்கள். சாவு அவர்களிடம் சரணடைந்து விடுகிறது. மரணத்தின் நாளை அவர்கள் எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். சாவு பற்றி அவர்கள் சிந்திப்பதில்லை. தம்மை அழிக்கும் அந்த இறுதிக் கணத்திலும் தமது இலக்கை அழிக்கும் நோக்கிலேயே அவர்கள் கண்ணும் கருத்துமாக இருப்பர். இலட்சிய உறுதியில் அவர்கள் இரும்பு மனிதர்கள்.

'கரும்புலி' என்ற சொற்பதத்தில் கருமையை மனோதிடத்திற்கும், உறுதிப்பாட்டிற்குமே நாம் குறிப்பிடுகிறோம். இன்னொரு அர்த்த பரிமாணத்தில் இருளையும் அது குறியீடு செய்யும், பார்வைக்குப் புலப்படாத ஊடகமான இரகசியமான தன்மையையும் செயற்பாட்டையும் அது குறித்து நிற்கும். எனவே 'கரும்புலி' என்ற சொல் பல அர்த்தங்களைக் குறிக்கும் ஆழமான படிவமாக அமையப்பெற்றிருக்கிறது. இந்த இரகசியத்தன்மை கரும்புலிகளின் செயற்பாட்டு வெற்றிக்கு மூலாதாரமானது. ஆளுக்கும் பெயருக்கும் அப்பால், அந்த தனிமனித தனித்துவத்திற்கு அப்பால், செயற்பாடே இங்கு முதன்மை பெறுகிறது. மனிதர்களின் இருப்பை விட மனிதர்களின் செயற்பாடே ஒரு போராட்ட வரலாற்றின் சக்கரத்தைச் சுழற்றுகிறது. பல கரும்புலி வீரர்கள் இன்று பெயர் குறிப்பிடாத கல்லறைகளில் அநாமதேயமாக உறங்கிய போதும் அவர்களது அற்புதமான சாதனைகள் வரலாற்றுக் காவியங்களாக என்றும் அழியாப்புகழ் பெற்று வாழும்.

***'கரும்புலி' என்ற சொற்பதத்தில் கருமையை மனோதிடத்திற்கும், உறுதிப்பாட்டிற்குமே நாம் குறிப்பிடுகிறோம். இன்னொரு அர்த்த பரிமாணத்தில் இருளையும் அது குறியீடு செய்யும், பார்வைக்குப் புலப்படாத ஊடகமான இரகசியமான தன்மையையும் செயற்பாட்டையும் அது குறித்து நிற்கும். எனவே 'கரும்புலி' என்ற சொல் பல அர்த்தங்களைக் குறிக்கும் ஆழமான படிவமாக அமையப் பெறுகிறது.***

முகத்தை மறைத்து, பெயரையும் புகழையும் வெறுத்து இலட்சிய மூச்சாக தமிழீழ விடுதலைக் காற்றுடன் கலந்து விட்ட இந்த சரித்திரநாயகர்களை நான் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன்.

மனித தியாகத்தின் இமயத்தை தொட்டுவிட்ட இந்த இனிமையானவர்களை நான் அறிவேன். அவர்களது நெஞ்சத்தின் பசுமையில் ஊற்றெடுத்த உணர்வுகளையும் நான் புரிவேன். ஏதோ ஒன்று மனித விடிவை நோக்கி நகரும் உந்துசக்தியாக அவர்களை ஆட்கொண்டிருந்தது. அந்த விடுதலையின் தாகத்தைத் தீர்க்க எதையும் செய்வதற்கு அவர்கள் தயாராக இருந்தார்கள். அவர்களை அரவணைத்து விடையளிக்கும்போது இனம் புரியாத உணர்வுகளால் எனது ஆன்மா நடுங்கும். ஒரு புனித யாத்திரையில் அவர்கள் போனார்கள். கண்ணீர் வடித்து நிற்கும் எமது மக்களுக்கு ஒரு புதிய வாழ்வு பிறக்கும் என்ற அசையாத நம்பிக்கையில் அந்தத் தியாகப் பயணத்தைத் தொடர்ந்தார்கள். அந்த புனிதர்களை எண்ணும் பொழுதெல்லாம் எனது நெஞ்சு புல்லரிக்கும். கரும்புலி வீரர்கள் பற்றி இன்று முழு உலகமும் பேசுகிறது. அவர்களது மகத்தான தியாகத்தைக் கண்டு மலைத்துப் போய் நிற்கிறது. பூகம்ப அதிர்வாகக் குமுறும் எமது போராட்டத்தின் உக்கிரத்தை உலக சமுதாயத்திற்கு உணர்த்தியவர்கள் கரும்புலிகளே. அன்றொரு காலம் அமைதிவழியில் உரிமை கேட்டு ஆர்ப்பரித்த தமிழினத்தை அடக்கு முறையாளனின் இரும்புக்கரங்கள் நசுக்கிவிட்டன. இன்று நீதிகேட்டு நெருப்பாக எரியும் தமிழரின் ஆவேச எழுச்சியை எந்தச் சக்திகளாலும் நசுக்கிவிட முடியாது. **"இது கரும்புலிகளின் சகாப்தம்".** - இடியும் மின்னலுமாக விடுதலைப்புலிகள் போர்க் கோலம் கொண்டுவிட்ட காலம். இந்தப் புதிய யுகத்தில் எமது போராட்டம் புதிய பரிமாணங்களில் விரியும். சாவுக்கு விலங்கிட்ட மறவர்கள் புதிய சரித்திரம் படைப்பார்கள். எமது சந்ததியின் விடிவுக்கு விளக்கேற்றி வைப்பார்கள். கரும்புலிகளின் புனித தினமாகிய இன்றைய நாளில் வரைபடாத சித்திரங்களாகவும், எழுதப்படாத சரித்திரங்களாகவும், எமது வாழ்வுக்காக தமது வாழ்வைத் துறந்த அந்த அற்புதமான தியாகிகளை எமது நெஞ்சில் நிறுத்திப் பூசிப்போமாக.

**"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"**

# கரும்புலிகள்

## ஒரு வரலாற்று அபூர்வம்

தத்துவங்கள் எல்லாம் தலை கீழாகிவிட்டன. வீறுகொண்டெழுந்த விடுதலைப் போராட்டங்கள் பல இடையில் வெம்பிப் பழுத்தவை போலாகிவிட்டன. அமைதி என்கிற மாயத்திரைக்குள் சமரசங்களும் இயலாமையும் தாண்டவமாடுகின்றன. இப்படியான இன்றைய உலகிலே பனிப்போர் கால கட்ட நெருக்கடி களையும் தாண்டி புதிய உலக ஒழுங்கினுள்ளும் புகுந்து அதன் அழுத்தங்கட்கும் முகம் கொடுக்கத் தயாராகும் விடுதலைப்புலிகள் இயக்கம் 'கரும்புலிகள்' எனும் படையணியைப் போராட்ட வரலாற்றின் புதுவிசையாக அறிமுகம் செய்துள்ளது. தன்னலத்தை "தனிநபர் சுதந்திரம்" என்றும், மனித விழுமியங்களற்ற மேற்குலக அதி நவீன இயந்திர வாழ்க்கைமுறையை "அறிவியல் வெளிப்பாடு" என்றும் கருதி தற்போதைய புதிய முதலாளிய பொருண் மிய ஒழுங்கின் கவர்ச்சியிலிருந்து விடுபட முடியாதோருக்கு இச்செய்தி ஏற்க முடியாத, ஏன் நம்ப முடியாத செய்தியாகத்தான் இருக்கும். ஏனென்றால் மனித குலம் காணாத மனித ஈகத்தின் அதி உயர் உச்ச வடிவமல்லவா இது!

இன்று கரும்புலிகள் போராட்ட வடிவத்தின் வரைவிலக்கணம் மிகத் தெளிவாக வரையறுக் கப்பட்டுள்ளது.



முன்னர் சீனப் புரட்சியின் போது மாவோ, பாரிய மரபுவழி இராணுவங்களிற்கு எதிராகப் போரிட எவ்வாறு 'கெரில்லா' போராட்ட முறையில் பல்வேறு புதிய உத்திகளைச் சூழ்நிலைக் கேற்ப புகுத்தினாரோ, அவ்வாறு இன்று நவீன போர்முறைகட்கு எதிராகப் போராடும் ஒரு சிறிய தேசிய இனம் தனது ஆன்மீக பலத்தை மட்டும் நம்பிப் புகுத்திய புதுவடிவம்தான் 'கரும்புலி'' படையணியாகின்றது. "தன்னை இழந்து எதிரிகளில் பலரையோ அல்லது எதிரியின் பலம் மிக்க இலக்கினையோ அழிக்கும் ஒரு படையணியை" உருவாக்கும் எண்ணத்தை தலைவர் திரு. வே. பிரபாகரன் தொடக்ககாலம் தொட்டே தனது மனதில் அடைகாத்து வந்துள்ளார். எண்ணிக்கை, படைபலம், கருவிகள் போன்றவற்றில் எதிரியைவிட அளவில் குறைந்த ஒரு போராட்ட அணி வெற்றியடைவதற்கு வெறும் வீராவேசத்திற்குப் பதிலாக விரக்தியையும், வீரத்திற்குப் பதிலாக மிக நுணுக்கமாகத் திட்டமிடப்பட்ட போர்த் திட்டமொன்றையும் அதேவேளை தன்னை இழப்பதன் மூலம் இலக்கை வெற்றி கொள்ளும் உத்தியையும் இணைத்தே தலைவர் திரு. வே. பிரபாகரன் கரும்புலிகள் என்ற புதிய போராயுதத்தை வடிவமைத்துள்ளார் என்பது வரலாறு சொல்லும் செய்தியாகும்.

எனவே மனித குலத்தின் உன்னத விழுமியமாக, உயரிய ஈகமாக பிறர்க்காகத் தன்னை அழித்தல் எனும் தற்கொடைப் பண்பாளர்களைக் கொண்ட படையணியை வரலாற்றில் சமகாலத்திலோ அல்லது முன்னரோ வேறெங்கும் காணமுடியாது. "விடுதலைப்புலிகளின் கரும்புலிகள்" பற்றி ஆய்வுசெய்வோர் இதன் தோற்றுவாயைப் பழந்தமிழரின் மறவர் போர்ப் பரம்பரையில், யப்பானிய போர் மரபுகளில் தொட்டுக்காட்ட முனைகின்றார்கள். யப்பானிய நிலமானிய முறைச் சமுதாய காலகட்டத்திலே யப்பானிய சக்கரவர்த்திகளின் முழு நம்பிக்கைக் குரிய போர் மரபுவழிப் பண்பாட்டைப் பின்பற்றும் 'சமுராய்' எனப்படும் போர்வீரர்கள் தமக்குரிய போர் மரபாக தமக்கிட்ட ஆணைகளைச் செய்து முடிக்க முடியாதபோது தமது மன்னர் தோல்வி

***வீரப்போரில் வீரச்சாவடைவதே ஆண்மகனின் கடமை என இளவயதிலேயே கற்பிக்கும் வீரத்தாய்ப் பண்பாடு, போரில் புறமுதுகு காட்டாது போரிட்டு உயிரை இழந்தோரை நடுகற்களால் நினைவு கூர்ந்து அவர்களைத் தெய்வங்களாக மதித்துவருவது போன்றன பழந்தமிழர் பண்பாடாகும்.***

யைத் தழுவும்போது தாமும் தம்முயிரை மாய்ப்பது வழக்கம். இது அக்காலகட்ட நிலவுடமைச் சமுதாய மரபாக இருந்தபோதும் யப்பானிய சமூகத்தில் இன்றும் தற்கொலை செய்யும் பழக்கம் ஒன்று நிலவுகின்றது. 'செப்பூடு' என்றும் பொது வழக்கில் 'தராசி' என்றும் அழைக்கப்படும் பண்டைய போர் மரபின் தற்கொலைச் செயற்பாடு இன்று அழுத்தங்களிலிருந்து விடுபட யப்பானியர் பின்பற்றும் அவல நிலையாகிவிட்டது. எனவே இதனை விடுதலைப் புலிகளின் பண்பாட்டோடு ஒப்பிடமுடியாது. 2ஆம் உலகப் போரின்போது 1941ஆம் ஆண்டு மார்கழியில் அமெரிக்கக் கடற்படைக் கப்பல்களைப் 'பேர்ள்' துறைமுகத்தில் தாக்கியழிக்க விமானமோட்டியொருவர் தனது விமானத்தைப் போர்க்கப்பலுக்குள் செலுத்தியமைபோன்று அபூர்வமான சம்பவங்கள் யப்பானிய வரலாற்றில் உண்டு. ஆனால் தற்கொடை வீரர்களைக் கொண்ட ஒரு படையணியை அதன் தொடர்ச்சியான செயற்பாட்டை அங்கு காண முடியாது.

இது போலவே பழந்தமிழர் போர்ப் பரம்பரையானது மறவர் பரம்பரையிலும் அரசனுக்காகத் தன்னை ஈகம் செய்யும் தன்மை போர் மரபாகக் கொள்ளப்பட்டதாக அறிய முடிகின்றது. உண்மையான தமிழ்ப் பண்பாடு எதுவென அறிய முயன்ற தமிழறிஞர்கள் அவர்கள் விரும்பியோ விரும்பாமலோ இரத்தம் சிந்திப் போர் புரியும் வீரப் பண்பாட்டையே தமிழர் பண்பாடாக விதந்து ரைக்க நேரிட்டது. வீரப்போரில் வீரச்சாவடைவதே ஆண்மகனின் கடமை என இளவயதிலேயே கற்பிக்கும் வீரத்தாய்ப் பண்பாடு, போரில் புறமுதுகு காட்டாது போரிட்டு உயிரை இழந்தோரை நடுகற்களால் நினைவு கூர்ந்து அவர்களைத் தெய்வங்களாக மதித்துவருவது போன்றன பழந்தமிழர் பண்பாடாகும்.

அதுபோலவே தமது அரசின்மேல் கொண்ட பற்றுறுதி காரணமாகத் தம்மை இழக்க முன் வருவதும் அவர் தோல்வியைத் தழுவும் போதும் இறக்கும்போதும் தாமும் "செஞ்சோற்றுக் கடன் தீர்க்க" இறத்தலும் அத்துடன் அவிப்பலி, தன்னை வெட்டல் என்பன பல போர் ஒழுக்கங்களாகவும்

அந்தப் போர் மரபு பேணப்பட்டிருந்தது. அதேபோல போரில் தமது சேனைத் தலைவன் வெற்றியீட்ட வேண்டும் என்பதற்காக 'கொற்றவை'க்குத் தனது தலையைத் தாமே வெட்டிப் பலி கொடுக்கும் வழக்கமும் இருந்தது. அத்தோடு போரில் தோல்வி, சிறைப்பட நேரும் அவமானம் போன்றவை ஏற்படும்போது அரசனானவன் உண்ணாநோன்பிருந்து உயிரை விடும் 'வடக்கிருத்தல்' எனும் போரொழுக்கமும் இருந்திருக்கின்றது. இதனை யப்பானிய மரபோடு ஆய்வாளர் ஒப்பிடுவர். ஆனால் தற்கொடை என்பதை இத்தகைய சூளுரைத்தல், செஞ்சோற்றுக் கடன் தீர்த்தல் அவமானத்திலிருந்து விடுபடல் என்கிற நிலைகளிலிருந்து விடுவித்து, அதையொரு பரந்த அடிப்படையில் மக்களுக்கான போராட்ட அணியாக்கியமை இங்கே பாரிய குணாம்ச வேறுபாடாகின்றது. ஏனென்றால் இப்பழந்தமிழர் பண்பாடெல்லாம் இடையில் பல நூற்றாண்டு களாக மறுக்கப்பட்டு, வந்தவனெல்லாம் எமது இனத்தை அடிமைப்படுத்தி அடிமை வாழ்வே தமிழர் பண்பாடாகிய வரலாறும் தமிழர்க்குரியது அல்லவா?

இது முன்னைய காலம். சமகாலத்தை நோக்கும் போது உலகில் அங்கொன்றும் இங்கொன்று மாகத் தற்கொடைப் போராளிகளின் தாக்குதலை அவதானிக்க முடியும். குறிப்பாக லெபனான் தலைநகரான பெய்ரூட்டில் அமெரிக்கப் படைத்தளம் மீது வாகனக் குண்டுத் தாக்குதல் நடத்தப் பட்டமையைக் குறிப்பிட முடியும். இப்போது இஸ்ரேலால் ஆக்கிரமிக்கப்பட்ட பாலஸ்தீனப் பகுதிகளில் இஸ்லாமிய 'கமாஸ்' இயக்கப் போராளிகள் சில தற்கொடைத் தாக்குதல்களை மேற்கொள்கின்றனர். இத்தாக்குதல்கள் 'கொலைக்குக் கொலை' என்கிற வகையில் உடனடியாக எழும் பழிவாங்கல் உணர்வின் காரணமாகத் தூண்டப்படுவதால் பல தடவைகளில் எதிர்பார்த்த விளைவுகளைத் தராமல் தாக்கங்களை விளைவிக்காமலேயே போய்விட்டன. முழுமையான போர்த்திட்டமொன்றின் பகுதியாக அல்லாமல் தனித்தனி உதிரிச் சம்பவங்களாக இவை அமைவதால் இவை தோற்றுவிக்க வேண்டிய பாரிய அச்ச உணர்வு, ஆழமான தாக்கங்கள் இஸ்ரேல் தரப்பில் ஏற்படவில்லை. இப்போராளிகளின் ஈகத்தைப் போற்றும் அதேவேளை, எமது

***விடுதலைப் புலிகளின் புதிய போர் மரபாகத் தோற்றுவிக்கப்பட்ட கரும்புலிப் படையணி தமிழினத்தின் விடுதலை வெகு தூரத்தில் இல்லை என்பதை உரைக்கும் கட்டியமாகின்றது. இச்சிறிய தேசத்திற்குள்ளிருந்து தோன்றிய இப்படையணியின் பேரொளி எதிரியைக் குருடாக்கி விடுவதோடு இதனைப் புரிய முடியாத எம்மவரையும் வரலாற்றுக் குருடராக்கி விடும் அபூர்வத் தன்மை கொண்டது.***

கரும்புலிகள் போராட்ட வடிவம் எத்தகைய தாக்கத்தை எதிரியின் தரப்பில் ஏற்படுத்தியுள்ளது என்பதையும் கருத்தில் எடுக்க வேண்டும். சிங்கள இராணுவத்தரப்பிலே தோற்றுவிக்கப்பட்டுள்ள பெரும் பீதி உணர்வு இத் தாக்குதல்களை என்ன பாடுபட்டாலும் தடுக்க முடியாது என்கிற அவநம்பிக்கை உணர்வு என்பவற்றை வரலாற்றில் வேறெங்கும் கரும்புலிகளின் தற்கொடைத் தாக்குதல்கள் தோற்றுவித்தமைபோல் காண முடிவதில்லை.

அத்தோடு இன்றைய நவீன உலகிலே போர்முறைகளும் வெகு நவீனமாகின்றன. இனிவரும் போர்முறைகளில் இயந்திர மனிதன், கணணிகள் என்பனவே மிகக் கூடிய பங்கினை வகிக்கும் என நம்பப்படுகின்றது. ஆனால் எந்த உயர் தொழில் நுட்பத்தாலும் கரும்புலித்தாக்குதல் முறையைத் தடுக்கமுடியாது என்பதே உண்மை நிலை. ஏனென்றால் உணர்வும் ஈகமும் மட்டுமல்லாமல் மனிதக் கணணியாகவும் அல்லவா கரும்புலிகள் செயல்படுகின்றனர். இம்மியளவும் இலக்குப் பிசகாத, நேரம் தவறாத இடியோசைபோல், சூறாவளி போல் மேற்கொள்ளப்படும் கரும்புலித் தாக்குதல்கள் இவ்வுலகையே ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டன.

எனவே இத்தகையதொரு வியத்தகு மனோபலத்துடன் மேற்கொள்ளப்படும் கரும்புலித் தாக்குதல்கள் உலக வரலாற்றில் மிக அபூர்வமாகத் தெறிக்கும் ஒளிக்கீற்று என்பதே என்றும் வரலாறு சொல்லும் செய்தியாக இருக்கப்போகின்றது. விடுதலைப்புலிகளின் புதிய போர் மரபாகத் தோற்றுவிக்கப்பட்ட கரும்புலிப் படையணி தமிழினத்தின் விடுதலை வெகு தூரத்தில் இல்லை என்பதை உரைக்கும் கட்டியமாகின்றது.

இச்சிறிய தேசத்திற்குள்ளிருந்து தோன்றிய இப்படையணியின் பேரொளி எதிரியைக் குருடாக்கி விடுவதோடு இதனைப் புரிய முடியாத எம்மவரையும் வரலாற்றுக் குருடராக்கிவிடும் அபூர்வத் தன்மை கொண்டது. காலின் கீழ் நசுக்கப்பட்ட இனத்தின் இதயத்திலிருந்து தோன்றிய தீப்பிழம்பாகக் கனன்று எரியும் விடுதலைத் தீ தான் **'கரும்புலிகள்'** ஆகும்.

# எம் தலைவரின் ஆத்மாவில் இருந்து எழும் குரல்

## "நீங்கள் முன்னால் போங்கோ, நான் பின்னால் வருவேன்"

கரும்புலியாகச் செல்கின்ற கரும்புலிவீரர்களுக்கு, தலைவர் அவர்கள் கடைசியாக இப்படிச் சொல்லித்தான் வழியனுப்பிவைப்பார்.

இது வெறுமனே அவரது வாயிலிருந்து வருகின்ற வார்த்தை அல்ல, அந்த மாபெரும் தலைவரின் ஆத்மாவிலிருந்து எழும் குரல் அது.

"உண்மையிலேயே என்றோ ஒருநாள் இதுதான் நடக்கும்" என்று உறுதியோடு தன்னுள் சொல்லி நிற்பவர் எம் தலைவர். கரும்புலி நடவடிக்கை ஒன்றை மேற்கொள்ளச் செல்கின்ற எங்கள் தேசத்தின் குழந்தைகள் அதற்குப் போவதற்கு முன்னதாக ஒரு நாளில், தலைவர் தனது பொழுதுகளை அவர்களுடன் கழிப்பார். இதனை அவர் எப்போதும் செய்வதுண்டு.

கரும்புலியாகச் செல்பவர்கள் தமது மனம் திறந்து பழகுவார்கள். எல்லாவற்றையும் பற்றிக் கதைப்பார்கள். பகிடிகள் சொல்லிச் சொல்லிச் சிரித்து மகிழ்வார்கள். தலைவரோடு ஒன்றாக இருந்து உணவருந்துவார்கள். அவரோடு சேர்ந்து நின்று விதம்விதமாகப் படமெடுப்பார்கள். தங்களது உள்ளக் கிடக்கைகளை எல்லாம் - உணர்வுகளை எல்லாம் - பகிர்ந்து கொள்வார்கள்.

கடைசியில் - தலைவரிடமிருந்து அவர்கள் விடைபெறுகின்றபோது - சோகம் கலந்த பெருமிதத்தோடு அவர்களைக் கட்டியணைத்து வழியனுப்பி வைக்கையில், அந்தத் தலைவனின் குரல் உறுதியோடு ஒலிக்கும் -

"நீங்கள் முன்னால போங்கோ, நான் பின்னால வருவன்."



முதலாவது

# கரும்புலித் தாக்குதல்

05-07-1987

# எவ்வாறு நடத்தப்பட்டது.





கரும்புலி கப்டன்
மில்லர்

# கரும்புலிகள்

Black Tigers என்பது தற்கொடைப்பிரிவைச் சேர்ந்தவர்களை குறிப்பதாக விடுதலைப்புலிகள் இயக்கத்தில் கொள்ளப்படுகிறது. இயக்கத்தில் சேர்ந்து விடுதலைப் போராட்டத்தை முன்னெடுக்கும் எல்லோருமே தம்முடைய அரிய உயிரை இலட்சியத்திற்காக துறப்பதற்கு எப்போதும் தயாராக இருக்கின்றனர். இயக்க உறுப்பினர்கள் அனைவருமே சைனைட் குப்பிகளை கழுத்தில் அணிந்து கொண்டு இருப்பார்கள். மிக இக்கட்டான சூழ்நிலையில் எதிரிகளிடம் பிடிபடாமலும் இயக்கத்தை பாதிப்படையவிடாமலும் செய்ய உயிர் துறந்தவர்கள் எத்தனையோ பேர்.

ஆனாலும் கரும்புலிப்பிரிவைச் சேர்ந்தவர்கள் நேரடியாகவே தமது உயிரைப் பணயம் வைத்து, அதைவிட தமது உயிரைக் கொடுத்து சில நடவடிக்கைகளில் ஈடுபடுவார்கள். அரிதாக, மிக அரிதாக அவர்கள் தப்பி திரும்பி வரும் சந்தர்ப்பங்களும் உண்டு. எப்படியிருந்தபோதிலும் அவர்கள் நடவடிக்கையில் இறங்கும்போது தம்முடைய உயிரை அந்த நடவடிக்கைக்காக தியாகம் செய்யத் தயாராகவே இருப்பர். இப்படியாக விடுதலைப்புலிகள் இயக்கத்தில் தற்கொடைத் தாக்குதலில் முதல் வீரச்சாவடைந்த கப்டன் மில்லரால் நடத்தி முடிக்கப்பட்ட தாக்குதல் எவ்வாறு நடத்தப்பட்டது என்பதை பற்றி சற்றுப் பார்ப்போம்.

மில்லர் வடமராட்சியின் துன்னாலைப் பகுதியை பிறப்பிடமாகக் கொண்டவன். அவனுடைய தந்தை இலங்கை வங்கி ஒன்றில் உயர் அதிகாரியாகப் பணியாற்றி வந்தார். தன்னுடைய தாயகத்தை மீட்க இராணுவத்தின் அடக்கு முறைக்கெதிராகப் போரிடத் தன்னுயிரைக் கொடுக்க அவன் எப்போதும் சித்தமாக இருந்தான். மில்லர் எமது இயக்கத்தில் சேர்ந்து பல தடவைகள் இராணுவத்துடன் மோதியிருக்கிறான். ஒவ்வொரு மோதலிலும் மில்லர் தன்னுடைய பணியை தனக்கே உரித்தான அபாரத் துணிச்சலுடன் செய்து பலருடைய மதிப்பைப் பெற்றவன்.

> கமல் வல்வெட்டித்துறையை பிறப்பிடமாகக் கொண்டவன். இவரது தந்தை துரைரத்தினம் தமிழர் விடுதலைக்கூட்டணியின் பாராளுமன்ற உறுப்பினர்களில் ஒருவர். தந்தையது பாதை எமது தாயகத்தை மீட்டெடுக்க சரியான தீர்வாகாது என்பதை உணர்ந்த கமல், எமது இயக்கத்திலே தன்னை இணைத்துக் கொண்டு போராடத் தொடங்கினான்.

வடமராட்சிப் பகுதியை சிறீலங்கா இராணுவத்தினர் முற்றுகையிட்டபோது பிரபாவின் அணியினரோடு சேர்ந்து பதில்த் தாக்குதலில் ஈடுபட்டான். வடமராட்சி யுத்தம் பல நாட்கள் தொடர்ந்து நடைபெற்றது. பலத்த சேதத்திற்கு பின் இராணுவத்தினர் வடமராட்சிப் பகுதியை ஆக்கிரமித்துக் கொண்டனர். வடமராட்சிப் பகுதியை திரும்ப மீட்க வேண்டும் என்பதில் மில்லர் துடியாய்த் துடித்தான்.

பிரபாவும், (பிரபா முன்னர் மன்னார்ப் பிராந்தியத்தில் விக்டருடன் பணியாற்றியவன்) மில்லரும் சேர்ந்து நெல்லியடி இராணுவ முகாமுக்குள் வெடிமருந்து வாகனங்களை விடுவதற்கு தலைவரிடம் அனுமதி கேட்டு, வெடி மருந்தையும் பெற்றுக்கொண்டனர். ஒன்றன் பின் ஒன்றாக இரு வண்டிகள் விடுவதற்கு திட்டமிட்டனர். முதலாவது வண்டியை மில்லரும் அதன் பின் இரண்டாவது வண்டியை ராசிக்கும் ஓட்டிச் செல்ல முன் வந்தனர்.

திட்டம் உருவானது. இரவு இரவாக நெல்லியடி இராணுவ முகாமுக்குள் வண்டிகளை விடுவது என்றும் ஏனென்றால் இராணுவத்தினர் இரவு 10 மணிக்குப் பின்னர் முகாம்களை விட்டு வெளியே வந்து சுற்றாடலில் இருந்து மக்கள் வெளியேறிய வீடுகளில் தங்கிவிடுவார்கள் என்பதால், அதற்கு முன்னர் வெடி மருந்து நிரப்பப்பட்ட வாகனங்கள் உள்ளே விடப்படல் வேண்டும். வாகனங்கள் முகாமை நெருங்கிச் செல்லும் பாதைகளில் பல தடைகள் போடப்பட்டு இருந்தன. எனவே வாகனங்கள் புறப்பட்டு முகாமை அடைவதற்கு அத்தடைகள் அகற்றப்படுதல் முக்கியமானதாகும். அந்த வேலையை கமல் பொறுப்பெடுத்துக்கொண்டான். பகல் வேளையே வாகனங்கள் தயார் செய்யப்பட்டு முகாமுக்கு அண்மையில் கொண்டு வரப்பட்டு இருக்கும். சரியான நேரம் நெருங்கியதும் எம்தோழர்கள் முகாமைத் தம்முடைய துப்பாக்கிகளாலும், ரொகட்டுகளாலும் தாக்கத் தொடங்குவார்கள்.

அந்த சந்தர்ப்பத்தில் கமலும் அவனுடைய சகாக்களும் தெருவில் உள்ள தடைகளை அகற்றுவார்கள். கமல் தடைகளை முற்றாக அகற்றிய பின் பிரபாவுக்கு அறிவிக்க வெடிமருந்து நிரம்பிய வாகனங்கள் முகாமைச் சென்றடையும்.

இது தான் திட்டம்.

கமல் வல்வெட்டித்துறையை பிறப்பிடமாகக் கொண்டவன். இவரது தந்தை துரைரத்தினம் தமிழர் விடுதலைக்கூட்டணியின் பாராளுமன்ற உறுப்பினர்களில் ஒருவர். தந்தையது பாதை எமது தாயகத்தை மீட்டெடுக்க சரியான தீர்வாகாது என்பதை உணர்ந்த கமல், எமது இயக்கத்திலே தன்னை இணைத்துக் கொண்டு போராடத் தொடங்கினான். பயிற்சியை முடித்துவிட்டு மட்டக்களப்புக்குச் சென்று சுமார் இரண்டு வருடங்களுக்கு மேல் பணியாற்றியிருந்தான். கிழக்கில் எமது இயக்க வளர்ச்சியில் கமலின் பங்கு மிகவும் குறிப்பிடக்கூடியது.

மட்டக்களப்பில் மிகவும் சிக்கலான சூழ்நிலைகளிலும் தன் தனித் திறமையினால் எத்தனையோ அரும் பெரும் காரியங்களை ஆற்றியிருக்கின்றான். இவன் அங்கு பணியாற்றிய காலத்தில் ஒரு பெண்ணைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. அப்பெண்ணுடைய வீட்டுக்கு கமல் செல்வது வழக்கம். ஆரம்ப காலங்களில் நாட்டின் விடுதலைக்காக தன் உயிரைப் பணயம் வைத்து கமல் பணியாற்றியது கமலின் பால் அந்தப் பெண்ணின் கவனத்தை ஈர்த்தது. கமல் வீட்டுக்கு போகும் சமயங்களில் எல்லாம் அன்பாக உபசரித்து கமலுக்கு ஆதரவளித்து , அன்பு செலுத்தினாள் . நாட்கள் நகர நகர இருவரும் அன்பால் இறுகப் பிணைக்கப்பட்டனர். ஒருவரை ஒருவர் மனமார நேசித்தனர். உலக வழக்கப்படி கூறினால் ஒருவர் மீது ஒருவர் காதல் கொண்டிருந்தனர். அப்பெண் கமலின் உயிர் வாழ்வுக்காக எப்போதும் கடவுளைப் பிரார்த்தித்து வந்தாள். ஆனால் ஒருபோதும் கமலின் தீவிரமான போராட்டத்துக்கு தடையாக இருந்ததில்லை.

மட்டக்களப்பில் இருந்து கமல் யாழ்ப்பாணம் வந்திருந்த வேளையிலே நெல்லியடி முகாம் மீதான தாக்குதலில் பங்குபற்ற முன்வந்தான்.

*மேஜர் கமல்*



முதல் நாள் கமலும், திலீபனும் ஒன்றாக இருந்த வேளையிலே திலீபனிடம் ஓர் வேண்டுதல் விடுத்தான் கமல். "நான் சிலவேளை இத்தாக்குதலில் சாவடைந்தால் என்னை நேசிப்பவளுக்கு அதை உடனடியாக தெரிவித்து விடு" என்பதாகும். என்ன சத்தியமான வார்த்தைகள். ஏதோ தன் இறப்பைத் தானே அறிந்து வைத்திருந்தது போல் கூறியிருக்கின்றான்.

தாக்குதல் நடவடிக்கைகள் மிக விரைவாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. மில்லர் மிகவும் கடுமையாக உழைத்தான். இராணுவத்தின் ஆக்கிரமிப்புக்குள் இருந்த நெல்லியடிப் பகுதிக்கு வெடிமருந்துகளையும், வாகனங் களையும் மிகுந்த சிரமப்பட்டு இரவோடு இரவாகக் கொண்டு வந்து சேர்த்தான். அவ்வேளைகளில்கூட தான் அடுத்த நாள் இறக்கப்போகின்றேன் என்ற விடயம் தெரிந்த மனிதனைப் போல் நடந்து கொள்ளவில்லை. கவலையோ திகைப்போ அல்லது பயமோ, தயக்கமோ எதையுமே அவனிடத்தில் காண முடியவில்லை. வெடி மருந்துகளை ட்ரக் வாகனங்களில் ஏற்றி, அவற்றுக்கு இணைப்புகளைக் கொடுத்து தன்னுடைய சவப்பெட்டியைத் தானே தயாரித்துக் கொண்டிருந்தான். அன்று பகல் முழுவதும் வெடி மருந்துடன் இரு வாகனங்கள் தயார் செய்யப்பட்டன. குழுக்கள் யாவும் உசார் நிலைக்கு கொண்டு வரப்பட்டது. நேரம் இரவாகிய போது குழுக்கள் முகாமை நோக்கி முன்னேறத் தொடங்கின. மில்லர் தன்னுடைய வாகனத்தில் ஏறி அமர்ந்து கொண்டான். கமலுடைய குழு, வாகனம் முகாமை நோக்கி செல்ல வேண்டிய பாதையில் போடப்பட்டு இருந்த தடைகள் உள்ள பகுதியை சென்றடைந்தனர். ஏனைய குழுக்களும் முகாமை நெருங்கி தத்தமது இடங்களில் தயார் நிலையில் நின்றனர்.

பொறுப்பாளரிடமிருந்து தாக்குதல் ஆரம்பிக்கும்படி கட்டளை பிறப்பிக்கப்பட்டது. எல்லோரும் முகாமை நோக்கி துப்பாக்கி பிரயோகம் செய்தார்கள். மில்லர் ஏறி அமர்ந்திருந்து ட்ரக் வண்டியை ஸ்ராட் செய்து எஞ்சினை உறுமிவிட்டு அமைதிப்படுத்தினான். பின் தன் வண்டியை செலுத்துவதற்கான உத்தரவுக்காக காத்திருந்தான். அப்போது கூட பக்கத்தில் இருந்த பிரபாவோடு ஏதோ 'யோக்' அடித்துச் சிரித்துக் கொண்டிருந்தான்.

முகாமை நோக்கி எமது தோழர்கள் துப்பாக்கிப் பிரயோகம் செய்து கொண்டிருக்கையிலேயே கமல் குறுக்கே பாய்ந்து தடைகளை அகற்ற முயன்றான். பெரிய மரக்கட்டைகள் புதைக்கப்பட்டிருந்தன. தான் கொண்டு வந்த வெடி மருந்துப் பெட்டியை கட்டைகளின் பின் வைத்துவிட்டு விலகி மறைவில் படுத்துக்கொண்டான். வெடி மருந்து வெடித்தது. அத்தோடு கட்டைகள் தூக்கி எறியப்பட்டு பாதை சீராகியது. அதே நேரம் பாதைக்கு நேரே அமைக்கப்பட்டிருந்த காவல் அரணில்

இருந்து இராணுவத்தினரின் மெசின்கன்கள் வெடிக்கத் தொடங்கியது.

கமல் தன்னுடைய வாக்கிடோக்கியில் அறிவித்தான். "தடைகள் அகற்றப்பட்டு விட்டது. ஆனால் புதிய சிக்கல் பாதைக்கு நேரேயுள்ள காப்பரணில் இருந்து துப்பாக்கிச் சூடு வருகின்றது. சற்றுப்பொறு".

மில்லருக்குப் பக்கத்தில் நின்ற பிரபாவின் வாக்கியிலும் அறிவிப்பு தெளிவாகக் கேட்டது. அதைக் கேட்ட மில்லர்,

"பிரபா பரவாயில்லை, வாகனத்தின் முற்பகுதியில் குண்டுகள் துளைக்காத படி தகடுகள் கட்டப்பட்டிருக்கின்றன. அதனால் நான் கொண்டு போய் சேர்த்து விடுவேன்" என்றான்.

"மில்லர் சற்றுப் பொறுத்துக் கொள் அந்த 'பங்கர்' உடைக்கப்பட்டதும் நீ செல்லலாம். மிக விரைவாக வண்டியைச் செலுத்தி வண்டியை விட்டு விட்டு நீ இறங்கி ஓடி வந்துவிடு" என்றான் பிரபா.

மில்லர் ஒரு முறை சிரித்துக் கொண்டான். ஏனென்று புரியவில்லை. அருகில் இருந்த பிரபா வுக்கு ஏனென்று கேட்க மனம் துணியவில்லை.

"பிரபா! முன்பு ஒரு முறை யாழ்ப்பாணத்தில் விடப்பட்ட வாகனம் சரியாக செல்லவில்லை. எனவே இம்முறை நான் மிக நிதானமாகவே வாகனத்தை செலுத்துவேன். எப்படியும் கட்டிடத்துக்கு மிக அண்மையில் வாகனத்தைக் கொண்டு செல்வேன்" என்று மில்லர் கூறினான்.

கமல் தன்னுடைய வோக்கியில் ரொக்கட் லோஞ்சர் (R.P.G) வைத்திருந்தவனை அந்த காப் பரணை உடைக்குமாறு கூற ரொக்கட் லோஞ்சரில் இருந்து மிகச் சரியாக ஏவப்பட்ட ரொக்கட் பங்கரைத் தாக்கியது. மணல் மூட்டைகள் சிந்தின. பங்கர் இருந்த இடத்தில் ஒரே புழுதியும் புகையும், கமல் தகவலைத் தெரிவித்தான். பொறுப்பாளரிடமிருந்து மில்லரை புறப்படுமாறு பிரபாவுக்கு உத்தரவு வந்தது.

மில்லர் வண்டியை 'ஸ்ராட்' செய்து மெதுவாகச் செலுத்தினான். பிரபா வண்டியின் பின்னால் ஏறிக்கொண்டான்.

வண்டி நெல்லியடிச் சந்தியை வந்தடைந்தது. மில்லர் வண்டியை நிறுத்தி பிரபாவை அழைத் தான். பிரபா மில்லருக்கு கையை அசைத்துவிட்டு வெடி மருந்து வெடிப்பதற்கான கருவியை இயக்கினான். கருவி இயங்கத் தொடங்கி விட்டது. மில்லர் வண்டியை மெதுவாக ஓடவிட்டான். பிரபா வண்டியில் இருந்து குதித்து வண்டியோடு சேர்ந்து ஓடி மில்லரின் பக்கத்தில் வந்து, "மில்லர் எப்படியும் திரும்பி வந்துவிடு" என்று கூற அதை மில்லர் புரிந்துகொண்டது போல் வண்டி வேகம் பிடித்தது. பிரபா அப்படியே தெருவில் நின்று வேகமாகச் செல்லும் வண்டியைப் பார்த்துக் கொண் டிருக்க மில்லரையும் வெடி மருந்தையும் சுமந்து கொண்டு வண்டி சென்று கொண்டிருந்தது.

வண்டி முகாமை நோக்கி வருவதை அறிந்த தோழர்கள் முகாமைவிட்டு 100 யார் பின்னுக்கு வந்தனர். கமல் நின்ற இடத்தை தாண்டி வண்டி சென்றதும் கமல் மில்லரை நோக்கி கையசைத்து விட்டு பின்னுக்கு செல்ல, சில நிமிடத்தில் நிலத்தை அதிரவைத்துக் கொண்டு பெரிய ஓசை எழுந்தது.

தோழர்கள் மீண்டும் முகாமை நோக்கி முன்னேறினார்கள். இராணுவத்தினர் தங்கியிருந்த சற்று முன்னர் கூட இராணுவத்தினர் நின்று துப்பாக்கிப் பிரயோகம் செய்த மிகப்பெரிய மாடிக் கட்டிடம் தரைமட்டமாகிக் கிடந்தது. அதில் இருந்த இராணுவத்தினர் கட்டிடத்தின் உள்ளேயே இறந்து போனார்கள்.

மில்லரின் தாக்குதலைத் தொடர்ந்து நடந்த அத்தாக்குதலில் கமலும் வீரச்சாவடைந்தான். நெஞ்சிலே காயமடைந்த கமலின் உடல் எடுத்து வரப்பட்டது. ஆனால் மில்லர் திரும்பவே இல்லை. மில்லர் வெடிமருந்தின் அதிர்வலைகளோடு சங்கமமாகி அதிர்வலையோடு சேர்ந்து தன் பணியை செவ்வனே முடித்தான்.

■ ■ ■

# "என்ர மகன் நாட்டுக்காகத்தானே செத்தவன், நினைக்க பெருமையாக இருக்கு"

**- முதற் கரும்புலி மில்லரின் அம்மா**

"என்ர மகன் எது செய்தாலும் நன்மைக்கா கத்தான் செய்வான் என்கிறது, என்ர நம்பிக்கை தம்பி. அதனால நான் அவன்ர போக்குகளைப் பற்றி பெரிசா யோசிக்கிறதில்லை" மில்லரின் அம்மா, தன் பிள்ளையைப் பற்றிப் பெருமை யோடு கூறிக்கொண்டிருந்தாள்.

"அவனொரு துடியாட்டமான பெடியன். ஒரு இடத்தில் ஆறுதலா இருக்கிறதைக் காணவே ஏலாது. ஏதாவது ஒண்டு செய்து கொண்டுதான் இருப்பான். மண்ணைக் கிண்டுவான், பற்றறி யையும் வயரையும் வைச்சு முடிஞ்சு கொண்டிருப்பான், அல்லது அப்பாவின்ர கார் 'பெனட்டை' திறந்து போட்டு, அதுக்குள்ள ஏதாவது கழட்டிப் பூட்டிக் கொண்டிருப்பான்..." அம்மா தொடர்ந்து சொல்லிக் கொண்டிருந்தாள்.

"மற்ற ஆட்களுக்கு உதவி செய்யிற பழக்கம் அவனிட்ட சின்னனில இருந்தே இருந்தது. ஆர் என்ன உதவி கேட்டாலும் உடனே போய் செய்து கொடுப்பான்.... முயற்சியும் இரக்கமும் அவன் பிறக்கும்போதே அவனோட கூடப் பிறந்ததுகள் தம்பி" மில்லர் சிறுவனாக இருந்த நாட்களில் அப்பா கார் ஓட்டும் போது அருகிலிருந்து அவ தானித்துக் கொண்டிருப்பவன், அப்பா இல்லாத நேரங்களில் அதையே திரும்பச் செய்து பார்க்கத் துவங்கினான். அடிக்கடி நின்ற இடத்திலேயே இயங்கிய கார் பின்பு மெல்ல உருளத் துவங்கியது.



நாட் செல்லச் செல்ல அகலமான வீட்டு முற்றத்தில் முன்னுக்கும் பின்னுக்கும் போய் வந்தது. ஒரு நாள் அம்மா சமையல் அறையில் வேலையாக இருந்தபோது, கார் வீதியிலே ஏறி விக்கி விக்கி ஓடத் துவங்கிவிட்டது. அம்மாவைப் பயம் பற்றிக் கொள்ள வீதியிலே ஓடிவந்து நின்று பார்த்தாள்.

இப்படித்தான் இன்னும் ஒரு நாள்-

மோட்டார் சைக்கிளில் வந்த இருவர் எரி பொருள் தீர்ந்து போனதால் வீட்டிற்கு முன்னால் நின்று திண்டாடிக்கொண்டிருந்தார்கள். எங்கோ இருந்து வீட்டிற்குத் திரும்பிக்கொண்டிருந்த மில்லர், அவர்களிடம் விடயத்தைக் கேட்டறிந்தான்.

வீட்டிற்குள் வந்தவன், மெதுவாக ஒளிந்து ஒளிந்து பின்னால் போய், கார் 'ராங்கிற்குள்' குழாயைச் செலுத்தி, வாயால் இழுத்துப் பெற்றோல் எடுத்து அவர்களிடம் கொடுத்து அனுப்பிவிட்டு, ஒரு அசல் அப்பாவியைப் போல அம்மாவுக்கு முன்னால் வந்து நின்றான். நடந்ததைக் கண்டபோதும் அம்மா அவனிடம் எதுவும் கேட்கவில்லை. அம்மாவுக்கும் அது பிழை மாதிரித் தெரிய வில்லை.

தன் பிள்ளை எது செய்தாலும் நன்மைக்காகவே செய்வான் என்பது அம்மாவின் நம்பிக்கை. அதனால், அவனது செய்கைளைப் பற்றி அம்மா கவலைப்படுவதில்லை.

காலச்சக்கரம் தன்பாட்டில் உருண்டு சென்றது. இப்போது 1984இன் ஆரம்பம். எங்கள் தேசத்தில் அடிக்கடி வெடியோசை கேட்கத் தொடங்கியது. எங்கள் மக்களின் இயல்பு வாழ்க்கை மாறியபொழுது, அது மில்லர் வீட்டிலும் பிரதிபலிக்கத் தொடங்கியது. மில்லரின் போக்கும் மாறிவிட்டது.

முன்புபோல், பழைய நண்பர்களுடன், மாந்தோப்பில் விளையாடுவது நின்றுபோனது. இப்போது புதிய நண்பர்களுடன் வெளியில் திரியத் துவங்கினான்.

ஒருநாள் பள்ளிக்கூடத்திலிருந்து அவசர அவசரமாக ஓடிவந்த தம்பி சொன்னான், "அம்மா... அம்மா அண்ணா சந்தியடியில் நோட்டீசு குடுத்துக் கொண்டு நிற்கிறான்."

அம்மாவுக்கு உள்ளூரப் பயம்தான். ஆனாலும், அம்மா அவனைப் புரிந்து கொண்டாள்.

அவனின் புதிய நண்பர்கள் அவனைத் தேடி வீட்டிற்கு வருவார்கள். மில்லர் அவர்களோடு புறப்பட்டுப் போவான். இப்படிச் செல்கிறவன் சில நேரங்களில் ஒரு சில இரவுகள் கழிந்தும் வருவான். அம்மா எல்லோருக்கும் சாப்பாடு தருவாள். எல்லோரும் சிரித்துக் கதைத்து சந்தோசமாக சாப்பிடுவதைப் பார்த்து சந்தோசப்படுவாள். இது வழமையாகிப்போனது.

இப்படித்தான் ஒருநாள் அந்த நண்பர்களோடு புறப்பட்டுப் போனவன் திரும்பி வரவில்லை. "பயிற்சி முகாமில் நிற்கின்றான்" என நண்பன் ஒருவன் வந்து சொன்னான். வீட்டில் எல்லோரும் அழுதார்கள். அம்மாவால் தாங்கிக் கொள்ளமுடியவில்லை. அவளும் அழுதாள். இருந்தாலும் சமாளித்துக்கொண்டாள்.

தன் பிள்ளை எது செய்தாலும் நன்மைக்காகத்தான் செய்வான் என்பது அம்மாவின் நம்பிக்கை.

அந்தத் தாய் அந்த இறுதி நாளை நினைத்துப் பார்க்கிறாள்.

"அது 'ஒபறேசன் லிபறேசன்' காலம். அந்த நேரம் இங்க எல்லா இடத்திலையும் ஆமி, அதனால இரவில நாங்கள் நேரத்தோடையே படுத்திடுவம். அண்டைக்கும் நாங்கள் படுத்திட்டம்...."

"திடீரென வீடெல்லாம் அதிர பெரிய ஒரு குண்டுச் சத்தம் எங்களைத் திடுக்கிட்டு எழுப்பிச்சுது. கொஞ்ச நேரம் சண்டை நடக்கிறதைப் போல சத்தம் கேட்டுக் கொண்டிருந்தது. பிறகெல்லாம் அமைதியாகிவிட்டது.

பொடியள் நெல்லியடிப்பக்கம் ஆமிக்கு நல்லா அடி குடுத்திருக்கிறாங்கள் போல கிடக்கு என்று எங்களுக்கை கதைச்சுப்போட்டு நாங்கள் படுத்திட்டம்.

அடுத்த நாள் காலையில் நெல்லியடிப் பக்கம் இருந்து வந்த ஒருத்தர் ஊருக்குள்ள சொல்லி - அந்தக் கதை மெல்ல மெல்ல என்ர காதுக்க வந்தபோது தான் தெரியும்...

முதல் நாள் வீட்டை உலுக்கி என்னை நித்திரையால் திடுக்கிட வைத்த அந்தக் குண்டு சத்தம்..... என்ர பிள்ளையும்....

அப்ப அழவும் ஏலாது. எல்லாப் பக்கத்திலையும் ஆமி..... அறைக்குள்ள போயிருந்து எனக்குள்ள மட்டும் குமுறிக்குமுறி அழுதன்.

றோட்டால ஆமி வாகனங்கள் வாற சத்தம் உறுமிக்கொண்டு கேட்கும் - மெதுவாக பின்பக்கத்தால வீட்டை வந்த சனங்கள் கலைஞ்சு போயிடுவினம்... பிறகு வருவினம்..."

ம் . . . ம். . . என்ர மகன் செத்திட்டான் என்கிறது எனக்கு கவலைதான். ஆனால் அவன் நாட்டுக்காகத்தானே செத்தவன்,

அதை நினைக்க பெருமையாத்தான் கிடக்கு

நிறைய இருக்கு. நான் சும்மா இருந்து சாகமாட்டன். பெரிய சாதனையொன்றைச் செய்துதான் சாவன். . . "

அந்த நண்பர்களுக்கு அப்போது அது புரியவில்லை. சிரித்துக்கொண்டு போனார்கள். ஆனால், இப்போது விக்கித்து நிற்கின்றார்கள்.

"பிரபல கரும்புலி போறார்" இப்படித்தான் தோழர்கள் அவனுக்குப் பகிடி சொல்லுவார்கள்.

ஆனையிறவில் வெடிபட்டு நரம்பு அறுந்து சூம்பிப் போனதால் "பெல்ட்" போட்டுக் கட்டியிருக்கும் இடது காலை இழுத்து இழுத்து ஒரு புன்சிரிப்போடு புவீந்திரன் போவான்.

அவனை ஒரு "கரும்புலிப் பைத்தியம்" என்று சொல்லலாம். அவனது நினைவுகள் கனவுகள் எல்லாமே ஒரு கரும்புலித் தாக்குதலைச் சுற்றித்தான் இருந்தன.

எவருமில்லாத தனியறையொன்றில் -

ஏதாவது ஒரு கடற்கரையோர வரைபடத்தை விரித்து வைத்து விட்டு, நீண்ட மெல்லிய ஒரு தடியோட புவீந்திரன் அருகில் நிற்பான். தன்னைத் தளபதியாகவும், அருகில் வீரர்கள் நிற்பதைப் போலவும் உருவகப் படுத்திக் கொண்டு வரைபடத்தைத் தடியால் தொட்டுக் காட்டி, அவன் காற்றுக்கு விளங்கப்படுத்திக் கொண்டிருப்பான்.

". . . டோரா இதாலதான் வரும் . . ."

". . . உங்கட வண்டியள் இந்த மாதிரி வியூகத்தில அதைக் குறுக்கால மறிச்சு அடிக்கும் . .."

". . . அந்த நேரம் இந்த விதமாகப் பக்கவாட்டில் உச்சவேகத்தில வந்து புவீந்திரன் இடிப்பான். . ."

". . . டோரா புக்கையாகும். . ."

ஒளித்திருந்து பார்த்துக் கொண்டிருக்கும் எங்களுக்கு, அவனைப் பார்க்க சிரிப்புத்தான் வரும்.

புவீந்திரன்!

அவன் ஒரு வித்தியாசமான போராளி மட்டுமல்ல. வித்திாயசமான மனிதனும்கூட.

**"எனக்கு கால் தான் நொண்டி, என்ர மனம் நொண்டியாகேல்லை. ஒரு உறுப்புத்தான் ஊனமாகப் போச்சுதே இல்லாம, உள்ளம் எப்பவும் உறுதியாய்த் தான் இருக்கிறது. அங்கங்கள் போறதைப் பற்றி எனக்கு கவலையில்லை......மனசில உறுதி தான் வேணும்."**

அவன் அமைதியானவன். ஆனால் சோம்பேறியல்ல. உற்சாகமானவன். ஆனால் குளப்படிக்காரனல்ல.

அவனோடு வாழக்கிடைத்த நாட்கள் எங்களுக்கு வரப்பிரசாதம்.

அவனுக்குமட்டுமே உரிய சில உயர்ந்த பண்புகள் இருந்தன. இவற்றை அவனிடத்தில் மட்டும்தான் காண முடியும்.

இயல்பாகவே அவனுக்கிருக்கின்ற இரக்க குணம், அடுத்தவர்கள் அவனில் இரக்கப்படும் விதமாக அவனை இயக்குவிக்கும்.

இயலாத காலோடும் கூட சில சமயங்களில் எங்களது நெஞ்சுருகும் விதமாக அவன் செயற்படுவான்.

கிணற்றடியில் உடுப்புத் துவைத்துக் கொண்டிருக்கும் நண்பன், அவசர வேலையொன்றிற்கான அழைப்பின் பேரில், துவைப்பதைப் பாதியில் விட்டுவிட்டு அவதிப்பட்டுப் போனானென்றால், அவன் திரும்பி வரும்போது அவனது உடுப்புக்கள் முற்றத்து வெயிலில் உலர்ந்து கொண்டிருக்கும். அப்படிப் பட்டவன் தான் புவீந்திரன்.

முகாமிற்கு யாராவது வெளி ஆட்கள் வந்துவிட்டால் - அவர்களை உபசரிக்க, அன்றைய 'முறை ஆளை'த் தேடித்திரிந்து, பின் மூலையில் போய்ப் பிடித்து வந்து விடுவதற்கிடையில் - வந்தவர்களுக்குத் தேநீர் கொடுத்துவிட்டு, அவன் பேணிகளைக் கழுவிக் கொண்டிருப்பான், அதுதான் புவீந்திரன்.

ஆனையிறவில் வெடிபட்டுக் காயம் மாறி வந்தவனுக்கு, யாழ். மாவட்ட நிர்வாகச் செயலகத்தில் தட்டச்சுப் பொறிப்பது பணி. அங்கொன்றும், இங்கொன்றுமாக எழுத்துக்களைத் தேடித் தேடிக் குத்திக் கொண்டிருந்தவன் - கொஞ்ச நாட்களில், மற்றவர்கள் மெச்சக்கூடிய அளவுக்கு அதில் தேர்ச்சி பெற்றான்.

அறிக்கைகள், கடிதங்கள், விபரக் கோவைகள், அது இது என்று நாளாந்தம் அவனுக்கு வேலைகள் குவிந்து போய்க் கிடக்கும். அப்படி இருக்கும் போதும் - கவிதை, கட்டுரைகளை எழுதிக்கொண்டு வந்து, "இதையும் ஒருக்கால் . . ." என்று கெஞ்சுகின்ற நண்பர்களிடமும் முகம் சுளிக்காமல் வாங்கி சட்டைப் பைக்குள் மடித்து வைப்பான். காலை- மாலை - இரவு என இமுபட்டு நள்ளிரவு கடந்து 1, 2, மணிவரை இருந்துகூட தனக்குரிய வேலையை முடிக்கின்ற அந்தப் போராளி அதன் பிறகும் விழித்திருந்து - நண்பர்களுடையதையும் அடித்துக் கொடுக்கின்ற நண்பன்.

புவீந்திரன்!

விடுதலைப்புலி வீரர்களின் வாழ்வுக்கு நீ ஒரு பாடம்.

உன்னோடு வாழ்ந்த நாட்கள், எக்காலத்திலும் தேயாத பசுமையான நினைவுகள்.

சூம்பிக் கிடக்கும் காலோடும் உன்னைத் தூக்கிக் கொண்டு போய் கடலில் இறக்கிவிடும் போதெல்லாம் சிறு பிள்ளை மாதிரித் தத்தளித்து தத்தளித்து கையைக் காலை விசுக்கி விசுக்கி - ஓயாத முயற்சியோடு அலைகளோடு போராடி - நீந்தப் பழகினாய்.

"பயிற்சிக் காலம் போதாது. ஒருத்தன்கூட சரியாய் அடிக்க மாட்டான் . . ." என்று சொன்ன வர்களிடம் சவால் விட்டு, பயிற்சி முகாமிலிருந்த அத்தனை பேருக்கும் சாள்ஸ் அண்ணன் 'ரச்' தந்தபோது வெடிபட்ட காலை அவரே சரியாய் எடுத்து விட்டு, ரைபிள் பிடித்துச் சொல்லித்தர - நீ மட்டுமே ஒரு 'புல்' லும் ஒரு 'நைனும்' அடித்து, சாள்ஸ் அண்ணனின் பெயரைக் காத்தாய்.

எதுவுமே தெரியாத அப்பாவிக் குழந்தையான உன்னிடம், நல்லதற்ற ஒரு வார்த்தையைச் சொல்லி, "இன்னாரிட்டைக் கேட்டுப் பார்; அர்த்தம் சொல்லுவார். . ." என்று அனுப்பி விட்டால் - அங்கு போய் நல்ல கிழி வாங்கிக் கொண்டு வந்து, விழுந்து விழுந்து சிரித்துக் கொண்டிருக்கும் எங்களுக்கு முன்னால் அசடு வழிய நிற்பாய்.

கால் இயலாமல் இருந்தும், மெல்ல மெல்லப் படகோட்டப் பழகி கிளாலிக்களத்தில் எதிரி களைக் கலைத்து விரட்டும் சண்டைகளில், அவைகளைக் கிழித்துச் செல்லும் எங்களது சண்டைப்படகுகளிற்கு ஓட்டியாய் இருந்தாய்.

இன்னும். . . இன்னும். . .

இவையெல்லாம், எக்காலமும் ஓயாமல் எங்கள் இதயங்களில் நினைவலைகளாய் மோதும்.

புவீந்திரன்!

சாதனையொன்றைச் செய்து தான் சாவேன் என்றாயா? சாகும் போது நீங்கள் படைத்தது ஒரு சாதனையல்ல. அது சாதனைகளின் ஒரு குவியல்.

'கனன்' எடுத்தது சாதனை. அது இரண்டாக இருந்ததும் ஒரு சாதனை. ஒரே தாக்குதலில் இரண்டு 'பிப்ரி' எடுத்தது இன்னொரு சாதனை. டோரா ஒன்றை முழுமையாக நொருக்கியது அடுத்த சாதனை. ஒரு கடற் தாக்குதலில் அதிக படையினர் கொல்லப்பட்டது வேறொரு சாதனை.

"ஆசீரில ட்ரெயினிங் தரேக்கை நாங்கள் ஒரு டோரா அடிக்க வேண்டும் எண்டு சாள்ஸ் அண்ணன் சொல்லுறவர். . ." என்று அடிக்கடி கூறும் நீ, "இப்ப நாங்கள் அடிக்கப் போறம், ஆனால், அதைப் பார்க்கிறதுக்கு அவர்தான் இல்லை" என்று கவலைப்படுவாய்.

அந்தத் தாக்குதல் திட்டம் உருவாக்கப்பட்டது.

கட்டைக்காட்டிலிருந்து பலாலிக்கு ரோந்து செல்லும் டோராவை, பருத்தித்துறைக்கு மேலே இடை மறித்து மூழ்கடிக்க வேண்டும். கட்டைக் காட்டிலிருந்து 18 மைல் தூரத்திலும் காங்கேசன் துறையிலிருந்து 18 மைல் தூரத்திலும் அந்தத் தாக்குதல் மையம் இருந்தது.

மணியரசனும் நீயும் தலைவரிடம் போனீர்கள்.

உங்கள் வாழ்வின் உச்ச உயர் நாள் அதுவாகத்தான் இருந்திருக்கும்.

உள்ளப்பூரிப்பின் சிகரங்களைத் தொட்டிருக்கக் கூடிய அந்த நாளில், உங்கள் மனவுணர்வுகள் எப்படியிருந்திருக்கும் என்பதை, வார்த்தைகளில் வடித்தெடுக்கமுடியாது.

சோகம் பரவிய முகத்தோடு, உன்னைக் கைதொட்டுத் தடவி. "எந்தக் காலிலையப்பன் வெடி பிடிச்சது?. . ." என்று, அக்கறையோடு தலைவர் விசாரித்தபோது மெய் சிலிர்த்து நின்று சிரித்தாயாம்.

எல்லாமே தயார்.

சக்கைக் வண்டி. சண்டைப் படகுகள், தாக்குதற் கருவிகள், தாக்கும் வீரர்கள். மணியரசன்,

நீ . . . எல்லாமே,

ஏறக்குறைய பதினைந்து நாட்கள். எதிரியின் வரவுக்காக கடல் மடியில் நீங்கள் காத்திருந் தீர்கள். - நள்ளிரவிலேயே நிலைக்குப் போய்விடவேண்டும். இருளை ஊடறுத்து உங்கள் விழிகள் பகைவனைத் தேடிக் கொண்டிருக்கும்.

மறுநாள் மதியமோ, மாலை வரையோ அந்தத் தேடல் நீடிக்கும், எதிரி வரமாட்டான், ஒவ்வொரு நாளும் ஏமாற்றத்தோடு திரும்பி வருவீர்கள்.

உற்சாகம் குன்றாமல், உறுதி குலையாமல் நீங்கள் மீண்டும் மீண்டும் போனீர்கள்.

29-08-1993, நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தவன் கடலில் வந்தான்.

பொங்கியெழும் எங்கள் கடலில் பகைவன் உலா வரவா?

காத்திருந்த வேங்கைகளின் ஆவேசமான பாய்ச்சல்.

தனியறையில் - வரைபடத்தை விரித்து வைத்து, நீ காற்றுக்கு விளங்கப்படுத்துகிற அதே தாக்குதல் திட்டம் - எங்கள் கண்ணெதிரே கடலில் நடந்து முடிந்தது.

அப்போது நாங்கள் சிரித்தோம். இப்போது . . .

இரண்டு 'கனன் பீரங்கி' களையும் 2 'பிப்ரி கலிபர்' களையும் மூழ்கிக் கொண்டிருந்த 'டோரா' விலிருந்து தோழர்கள் எடுத்துக் கொண்டு வந்தார்கள்.

புவீந்திரன் வரமாட்டான். . . !

மணியரசனும் வரமாட்டான். . .!

மணியரசன்!

"பதினைந்தும் நிரம்பாத பாலக வயதில், தாயகத்துக்காய் தனையீந்த கரும்புலி. என் கருவில் விளைந்த பிள்ளை" என்று, தமிழீழத் தாயை தலைநிமிர்ந்து சொல்ல வைத்த அடலேறு அவன்.

அந்தத் துடியாட்டமும், துடுக்கான பேச்சுக்களும் எங்களது நெஞ்சுக் கூட்டுக்குள் அவனது நினைவுகளைப் புதைத்துவிட்டுப் போய்விட்டன.

இந்தச் சின்ன வயதிலும் பிறைச் சந்திரன் போல ஒரு மெல்லிய மொட்டை, அகவைக்கு ஏற்ற அளவில் குழந்தை வளர்ச்சி, குறும்புச் சிரிப்போடு ஓர் உருண்டை முகம். நிமிர்ந்த - லாவகமான - திடகாத்திரமான உடல்வாகு, எங்கள் கண்ணெல்லாம் அந்த வண்ணக்கோலம்.

மணியரசன் குறுகுறுத்தவன்.

பஜரோலில் வருகின்றவர், வீட்டிற்குள் போய் அலுவல் முடித்துவிட்டு, போன வேகத்திலேயே திரும்பிவந்தால் கூட, பஜரோ அடுத்த பக்கமாகத் திரும்பி நிற்கும் "ஆரடா தம்பி பஜரோவைத்

*"பதினைந்தும் நிரம்பாத பாலக வயதில், தாயகத்துக்காய் தனையீந்த கரும்புலி. என் கருவில் விளைந்த பிள்ளை" என்று, தமிழீழத் தாயை தலைநிமிர்ந்து சொல்ல வைத்த அடலேறு அவன்.*

திருப்பி விட்டது?" வந்தவர் தேடினால், ஒதுக்குப் புறமாக மணியரசன் தலையைச் சொறிந்து கொண்டு நிற்பான். அது மோட்டார் சைக்கிளானால், ஒரு '8' அடித்து விட்டுத் திரும்பி நிற்கும், உள்ளே போனவர் வெளியில் வந்தால் - ஏதோ முக்கிய வேலையில் மூழ்கியிருப்பவனைப் போல, தூரத்திலிருந்து ஓரக்கண்ணால் பார்ப்பான், முகாமிற்குப் புதிதாகக் கொண்டுவரப்படும் ஒரு பொருள் துண்டுகளாகப் பிரித்து மேசையில் வைக்கப்பட்டிருக்கும். யாருடைய வேலை இது என்று யாருமே கேட்பதில்லை. மணியரசன் குறுகுறுத்தவன்தான். குளப்படிக்காரன் தான். ஆனால் எவருடைய கோபத்திற்கும் ஆளாகின்றவனல்ல.

ஒரு தடவை அவனோடு பழகியவர்களுக்கு இன்னொரு தடவை அவனை நினைவுபடுத்தத் தேவையில்லை. எல்லோருடைய நினைவுகளிலும் நிலைத்துவிடும் வசீகரம் அவனிடமிருந்தது. மிகக் குறுகியகாலத் தொடர்பு சாதன வேலையில் - அவன் சேர்த்து வைத்திருந்த முகம் தெரியாத நண்பர்கள் பலர். எந்த நிலையத்தில் தகவல் பரிவர்த்தனை வேலை செய்பவராக இருந்தாலும், அவனோடு கதைக்காமல் அவர்கள் அலைவரிசையை மூடிக்கொண்ட நாட்கள் மிகக் குறைவு, மணியரசா! உனது அன்பின் வீச்சுத் தூரம், தமிழீழத்தின் எல்லைகளைத் தொட்டிருந்ததடா! மணியரசனுக்கு ஒரு பொழுதுபோக்கு, மற்றவர்களைக் கிண்டல் செய்து கொண்டிருப்பது அவனிருக்குமிடத்தில் வாய் திறக்க அநேகமானவர்களுக்குப் பயம். ட்ரக் ஓடும் ஐம்பது வயது ஐயாவிலிருந்து, புதிதாக இயக்கத்திற்கு வரும் சின்னப் பையன் வரை - வயது வேறுபாடின்றி - எல்லோருமே அவனுடைய அறுவைக்கு இலக்கு. ஆனாலும் மணியரசா! "இயக்கம் பொம்மர் வாங்கினா, அதை இறக்க எங்களிட்டை ஒரு 'றண்வே' இருக்கு" என்று மயிரில்லாத உன் முன்பக்கத் தலை அறுவைக்கு உள்ளாகும்போது கூட, மேல் மயிரைத் தட்டிவிட்டு 'உரு மறைப்புச்' செய்து கொண்டு, புன்னகையோடு அந்தக் கிண்டலை ஏற்றுக் கொள்ளும் உனது நட்பின் பண்பு உயர்ந்தது. ஊரிலும், பள்ளிக்கூடத்திலும் கனியூட் என்று செல்லமாக அழைக்கப்பட்ட வேதநாயகம்

ராஜரூபன்தான் எங்கள் மணியரசன்.

குடும்பத்தில் கடைசித் தங்கச்சிக்கு நேரே மூத்த இவன், 7ஆவது பிள்ளை.

மணற்காடு றோமன் கத்தோலிக்க மகாவித்தியாலயத்தில் படிக்கும்போது, அதன் உதை பந்தாட்டக் குழுவொன்றில் சிறந்த ஒரு விளையாட்டு வீரனாக இருந்ததுடன், அவன் படிப்பிலும் கெட்டிக்காரனாம்.

அப்பா தொழிலுக்குப் போகும்போது, இடைக்கிடை அவரோடு கடலுக்குப் போகிறவன், திறமையான நீச்சல்காரனாகவும் ஆகியிருந்தான். 1991இன் நடுப்பகுதியில் இவன் இயக்கத் திற்கு வரும் போது 8ஆம் வகுப்போடு படிப்பை இடையில் நிறுத்திவிட்டுத்தான் வந்தான். அவன், எலலாத் திறமைகளும் ஒருங்கிணைந்திருந்த ஒரு போராளி. இந்தத் தேசம் அவனிடமிருந்து பெற்றுக்கொள்ள நிறையவே இருந்தது. அவற்றை வழங்கும் ஆற்றலையும் அவன் கொண்டிருந் தான். ஆனால்,

ஒரு கரும்புலித் தாக்குதல்தான் அவனுடைய பிரதான குறியாக இருந்தது. கடைசியிலும் அதைத்தான் அவன் செய்தான். கடற்புலிகளின் 1ஆவது பயிற்சி வகுப்பில் பயிற்சி எடுக்கும் போதே பயிற்சிகளில் ஆர்வம் நிறைந்தவனாகவும், பரீட்சைகளில் அதிக புள்ளிகள் பெறுபவனாக வும் திகழ்ந்தான். சிறந்த ஒரு விடுதலை வீரனாக முளைவிட்டான். அவனுடைய தெளிவான பேச்சு வன்மையும், விடயங்களைக் கிரகித்துக்கொள்ளும் வேகமும் தான் அவனைத் தகவல் பரிவர்த்தனை வேலைக்கு ஏற்றவனாக இனம் காட்டின. தகவல் தொடர்புச் சாதனம் கற்பிக்கும் பாடத் திட்டமானது. பொதுவாக, 'இவ்வளவு காலப்பயிற்சி' என வரையறுக்கப்பட்டது. ஆனால் மணியரசன் அதனைக் கற்றுக்கொண்டுவிட்ட நாட்களை விரல் மடிப்பிற்குள் அடக்கிவிடலாம்.

இரண்டே வருடகால அவனுடைய போராட்ட வாழ்வின் மிகப் பெரும்பாலான நாட்கள் தொடர்பு சாதனம் இயக்கும் வேலையிலேயே அவனை ஈடுபடுத்தின. அந்தப் பணியின் முக்கியத் துவத்தையும் - இன்றியமையாமையையும் அவன் புரிந்துணர்ந்திருந்த போதிலும், சண்டைக்குப் போக வேண்டுமென்ற ஆதங்கமே அவனிடம் மேலோங்கியிருந்தது. கங்கை அமரன் வன்னிக்குப் புறப்பட்டால் தானும் வரப்போவதாக நச்சரிப்பான். பிருந்தன் மாஸ்ரர் கிளாலிக்கு வெளிக்கிட்டால், தன்னையும் கூட்டிச் செல்லுமாறு அடம்பிடிப்பான். தன்னோடு நிற்கும்போதே, சண்டைக்கு அனுப்பும்படி மணியரசன் தனக்கு எழுதும் கடிதங்களை வாசிக்க வேண்டிய நிர்ப்பந்தம் தளபதி சூசைக்கு இருந்தது.

அவனது ஆசை ஓரளவு பூர்த்தியாகி வர- வடமராட்சியிலுள்ள தலைமைத் தளத்தில் பகல் முழுவதும் தொடர்பு சாதனம் இயக்கிக் கொண்டிருப்பவன், இரவுகளில் கிளாலியின் சண்டை முனையில் ஒரு எல்.எம்.ஜியுடன் வலம் வரத் தொடங்கினான்.

இறுதிக் காலத்தில் முழுமையாக கிளாலியின் மக்கள் பாதுகாப்புப் பணியில் ஈடுபட்டிருந்த பொழுதுகளிலும், ஒரு கரும்புலித் தாக்குதலே மணியரசனுடைய பிரதான குறியாக இருந்தது. எங்களுக்குள் சுழன்று திரிந்த அந்த இனிய நண்பன், அதைத்தான் செய்து முடித்தான்.

அவனுடைய கடைசி நாட்களில் அவன் மிகுந்த உற்சாகமாக இருந்தான்.

தனது முகம் தெரியாத நண்பர்களிடம் வானலைகளினூடாக விடைபெற்றான். அந்த தொடர்புச் சாதனத்திடமிருந்தும் விடை பெற்றான்.

கிளாலிக் கடலில் - சிதைந்து போன நிலையிலும் மதன் அதிசயமாய் மிதந்து வந்தபோது, நாங்கள் பக்குவமாய் எடுத்து வந்து துயிலுமில்லத்தில் விதைக்கையில், கண்ணீரோடு மதனுக்கு மண் போட்டான். அந்த நேரத்தில் எனக்கு மண்போடும் பாக்கியம் ஒருவருக்கும் கிடைக்காது என்று நினைத்திருப்பானோ. . . . ?

தோரணம் கட்டி, பந்தல் போட்டு- மதனுக்கும் வரதனுக்கும் அஞ்சலி செய்த போது, வீதி வீதியாகத் திரிந்து பார்த்தான். இன்னும் நாலு நாளில் தனக்கும் இப்படித்தான் செய்வினம் என்று நினைத்திருப்பானோ. . . .?

இப்போது அவன் போய் விட்டான். எங்களால் எட்ட முடியாத தொலைவுக்கு. எங்களை கிண்டல் செய்து கொண்டிருந்த அந்த அறுவைக்காரன் இப்போது இல்லை. இயக்கம் "பொம்மர்" வாங்கினால் இறக்கி ஓட அந்த "றண்வே"யும் இப்போது இல்லை!

■ ■ ■

# கடற்கரும்புலிகள்

11-11-1993



கடற் கரும்புலி மேஜர்
**கணேஸ்**



கடற் கரும்புலி மேஜர்
**கோபி**

## நாகதேவன்துறை கடற்படைத்தள தாக்குதல் வெற்றிக்கு உறுதுணையாய் அமைந்த கடற்கரும்புலித் தாக்குதலில் வீரகாவியம் படைத்த வீரமறவர்கள்



# பூநகரி இராணுவத்தளம் மீதான

11.11.1993



கரும்புலி மேஜர்
தொண்டமான்



கரும்புலி லெப்.
செங்கண்ணன்



கரும்புலி கப்டன்
ஐயனார்



கரும்புலி கப்டன்
செந்தமிழ்நம்பி



கரும்புலி லெப்.
நல்லதம்பி



கரும்புலி லெப்.
ஜீவரஞ்சன்



கரும்புலி லெப்.
வீரமணி



கரும்புலி கப்டன்
சீராளன்



கரும்புலி மேஜர்
கலியழகன்

# வெற்றிக்கு வழி அமைத்த கரும்புலிகள்

கரும்புலிகள்

பூநகரி இராணுவத்தளம் மீதான

11.11.1993

# வெற்றிக்கு வழி அமைத்த

# 13 கரும்புலிகள்

நவம்பர் 11, 1993 அன்று தமிழீழ விடுதலைப்புலிகளால் பூநகரி தளம் மீது மேற்கொள்ளப்பட்ட ஈரூடக தாக்குதலான தவளைப்பாய்ச்சல் இராணுவ நடவடிக்கையின் போது பலாலி இராணுவ கூட்டுத்தளத்தினுள் கரும்புலிகள் புகுந்து சிங்கள இராணுவத்தை பேரதிர்ச்சிக்குட்படுத்தினார்கள்.

இக் கரும்புலித்தாக்குதல் சிங்கள இராணுவக் கட்டமைப்பில் திடீரென சீர்குலைவை ஏற்படுத்தி அவர்களை நிலைகுலைய செய்து, தடுமாற்றத்திற்குள்ளாக்கியது. பூநகரிச் சமரில் விடுதலைப்புலிகளின் பலத்திற்கும் இராணுவ வெற்றிக்கும் உறுதுணையாய் அமைந்தவர்கள் கரும்புலிகளே.

"கரும்புலிகள்" மூலம் உருவாக்கப்பட்ட இத்தந்திரோபாயம் பூநகரி சமரில் விடுதலைப்புலிகளின் வெற்றியை இலகுவாக்கியது.

இக் கரும்புலித்தாக்குதல்களில்.......





*கரும்புலி கப்டன்*
**கரிகாலன்**



*கரும்புலி கப்டன்*
**மதிநிலவன்**



*கரும்புலி கப்டன்*
**சிவலோகன்**



*கரும்புலி லெப்.*
**கண்ணன்**



02-08-1994

கரும்புலி மேஜர்
நிலவன்

கரும்புலி மேஜர்
ஜெயம்

கரும்புலி மேஜர்
திலகன்





# பலாலி விமானத்தள மையம் நோக்கி கரும்புலிகள்











கரும்புலி கப்டன்
திரு

கரும்புலி லெப்டினன்
ரங்கன்

கரும்புலி கப்டன்
நவரெட்ணம்

வேவுப்புலி மேஜர்
சேரன் (அசோக்)

6 வேவு வீரர்களின் முயற்சிதான் பலாலி விமானத்தள மையம் நோக்கிய கரும்புலி நடவடிக்கைக்கான திட்டத்திற்கு கருக்கொடுத்தது. அவர்களது ஓய்வற்ற கடும் உழைப்பு அந்தத் திட்டத்தை படிப்படியாக வளர்த்து முழுமைப்படுத்தியது.

தாக்குதல் இலக்கை வேவு பார்த்து தாக்குதலணி நகரப்பாதை அமைத்து தாக்குதல் பயணத்தில் 'தரிப்பிடம்' கண்டு தாக்குதலுக்குகான நாள் குறித்த அவ்வேவுப்புலி வீரர்கள்--

கரும்புலி வீரர்களுக்கு உறுதுணையாக வழிகாட்டிச் செல்லத் தயாராகி நின்றார்கள். தாக்குதல் திட்டம் தயாரிக்கப்பட்டுவிட்டது.

பெரிய நோக்கம்.

அரசியல் ரீதியாகவும் படையியல் ரீதியாகவும் முக்கியத்துவத்தைப் பெறக்கூடிய ஒரு நடவடிக்கை. எமது மக்களின் உயிர்வாழ்வோடு பிணைந்ததும்கூட.

ஆனால் அது ஒரு பலமான இலக்கு. உச்சநிலைப் பாதுகாப்புக்கு உட்பட்ட கேந்திரம். செல்பவர்கள் வெல்லமுடியும். ஆனால் திரும்ப முடியாது. சிங்கத்தின் குகைக்குள் நுழைந்து அதனை எதிர்கொள்வதற்கு நிகரான செயல் அது. இருப்பினும் தாக்குதல் தேவையானது. வேவு அறிக்கைகளின் அடிப்படையில் தாக்குதலுக்கான வழிமுறை தீர்மானிக்கப்பட்டது. -அது ஒரு கரும்புலி நடவடிக்கை. நான் முந்தி நீ முந்தி என்று நின்றவர்களுக்குள் தெரிவாகியவர்களைக் கொண்டு தயார் செய்யப்பட்டது ஒரு தாக்குதலணி.

கெனடி அதன் கள முனைத் தளபதி.

அவனோடு இன்னும் 6 வீரர்கள். சிற்றுருவ மாதிரிப் படிவமாக (Model) அமைக்கப்பட்டிருந்த பலாலி வான்படைத் தளத்தையும் அதன் ஓடுபாதைகளையும் சுற்றி அவர்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

தளபதி கடாபி அவர்களுக்குரிய தாக்குதல் வழிமுறைகளைத் தெளிவுபடுத்தினார். ஒவ்வொருவருக்குமுரிய இலக்குகளைக் காட்டி விளக்கினார். ஒவ்வொருவரும் எவ்விதமாகச் செயற்பட வேண்டும் என்பதை அவர் சொல்லிக் கொடுத்தார்.

அவர்களுக்குரிய ஒத்திகைப் பயிற்சிகள் ஆரம்பித்தன.

"பயிற்சியை கவனமாகச் செய், சண்டையை சுலபமாகச் செய்" என்பது ஒரு படையியல் கோட்பாடு.

அந்தக் கோட்பாட்டின்படியே அவர்கள் செயற்பட்டார்கள்.

ஆகா....! அந்த நேரத்தில் நீங்கள் பார்த்திருக்கவேண்டும் அவர்களை,

மெய்யுருகிப் போயிருப்பீர்கள்.

எவ்வளவு உற்சாகம். எவ்வளவு ஆர்வம். ஓய்வற்ற பயிற்சிகளில் அவர்கள் காட்டிய மனமார்ந்த அந்த ஈடுபாடு....!

எப்படி வாழவேண்டும் என்று சிந்தித்துக் கொண்டிருக்கின்ற எங்களுக்குள்ளிருந்துதானே அவர்கள் போனார்கள். உயிரைக் கொடுத்துவிட்டு எப்படி வெற்றியைப் பெறவேண்டும் என்றலவா ஒத்திகை பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களுக்குள் இருந்திருக்கக்கூடிய தேசாபிமானத்தை நினைத்துப் பாருங்கள். அவர்களுக்குள் இருந்திருக்கக்கூடிய தமிழபிமானத்தை எண்ணிப் பாருங்கள்.

எங்கள் தலைவன் ஊட்டி வளர்த்த மேன்மை மிகு உணர்வு அது.

தங்களது கடைசிக் கணங்களில்-- தங்களின் உயிர் அழிந்துவிடப்போவதைப் பற்றியல்ல. தங்களின் இலக்குகள் அழிக்கப்பட வேண்டியதைப் பற்றியே அவர்கள் சதா சிந்தித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படிப்பட்டவர்களிடம் போய் நீங்களில்லையாம் ஆட்களை மாத்தப்போகினமாம்" என்று சொன்னால் எப்படியிருக்கும்?

அப்படி ஒரு கதை, கதையோடு கதையாக வந்து காதில் விழுந்தது.

"குலுக்கல் போட்டு புதுசா ஆக்களைத் தெரிவு செய்யப் போறனெண்டு" சொர்ணம் அண்ணன் சொன்னவராம் என்றது அந்தத் தகவல். கெனடி குழம்பிவிட்டான். அவனால் அதனை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தளபதியிடம் போய் சண்டை பிடித்தான்.

நான் தான் கட்டாயம் போக வேணும் என்று விடாப்பிடியாகச் சொன்னான். வேணுமென்றால் அவர் மற்ற ஆட்களை மாத்தட்டும். குலுக்கல் தெரிவுக்கு என்ர பேரைச் சேர்க்க வேண்டாம். திட்டவட்டமாகக் கூறினான்.

எந்த மாற்றமும் செய்யப்படாமலேயே எல்லா ஒழுங்குகளும் பூர்த்தியாகிவிட்டன.

அவர்களுடைய நாள் நெருங்கிவிட்டது.

கடைசி வேவுக்குப் போனபோது அசோக்கிடம் ஜெயம் சொன்னானாம்.

"கரும்புலிகளுக்குள்ளேயும் நாங்கள் வித்தியாசமாகச் செய்யப்போகிறோம்.

இது ஒரு புதுவடிவம். நாங்கள் இவற்றை அழிக்கும்போது சிங்களத் தளபதிகள் அதிர்ச்சிக் குள்ளாவார்கள்"

தலைவர் வந்து வழியனுப்பிவைத்தார்.

அவர்களுக்கு அது பொன்னான நாள்.

ஒன்றாயிருந்து உணவருந்திய தலைவர் கட்டியணைத்து முத்தமிட்டு விடை தந்தபோது கரும்புலிகளுக்கே உயிர் புல்லரித்தது.

"நான் நம்பிக்கையோடு எதிர்பார்த்திருக்கின்றேன்" தலைவர் வழியனுப்பி வைத்தார்.

மேலே வானத்துக்கும் பூமிக்கும் இடையில்-

வெகு உல்லாசத்துடன்-

உலங்குவானூர்தி ஒன்று பலாலிப் பக்கமாகப் போய்க்கொண்டிருந்தது. அட்டகாசமாய் சிரித்து விட்டு நவரட்ணம் சொன்னான். "இண்டைக்குப் பறக்கிறார். நாளைக்கு நித்திரை கொள்ளப் போகிறார்"

நீண்ட பயணத்திற்குத் தயாராகி சிரித்துக் கும்மாளமடித்துக்கொண்டு நின்றவர்களிடம் எல்லாரும் வெளிக்கிட்டு விட்டீர்கள் தூரதேசத்துக்குப் போல இருக்கு.....

தளபதி சொர்ணம் கேட்க-

கண்களால் புன்னகைத்து ரங்கன் சொன்னான்-

"ஓமோம் கிட்டண்ணையிட்ட, திலீபண்ணை இப்படி நிறைய தெரிஞ்ச ஆக்கள் அங்க இருக்கினம்"

பலாலிப் பெருந்தளத்தின் முன்னணிக் காவலரண்களுக்கு மிகவும் அருகில் எங்கள் தளபதி களிடம் விடைபெற்றுச் செல்லும்போது நின்று திரும்பி தளபதி செல்வராசாவிடம், அண்ணன்மார் கவனமாகப் போங்கோ 'செல்' அடிப்பான் என்று சொல்லிவிட்டுப் போனான் திரு.

***தாக்குதலணி தாக்குதல் மையத்தைச் சென்றடைவதே ஒரு பெரிய விடயமாகக் கருதப்பட்டது. புறப்பட்டுப் போகும்போது அவர்களிடம் இருந்தது தளராத உறுதி. தணியாத தாகம். எல்லாவற்றையும் மேவி அசையாத தன்னம்பிக்கை.***

கைகளை அசைத்து அசைத்துச் சென்ற கரும்புலிகள் இருளின் கருமையோடு கலந்து மறைந்தார்கள்.

தாக்குதலணி தாக்குதல் மையத்தைச் சென்றடைவதே ஒரு பெரிய விடயமாகக் கருதப்பட்டது. புறப்பட்டுப் போகும்போது அவர்களிடம் இருந்தது தளராத உறுதி. தணியாத தாகம். எல்லாவற்றையும் மேவி அசையாத தன்னம்பிக்கை.

ஆகஸ்ட் திங்கள் முதலாம் நாள்-

பகற்பொழுது பின்வாங்கிக் கொண்டிருந்தது. யாழ்ப்பாணக் குடாநாட்டை இருள் விழுங்கிக் கொள்ள பலாலிப் பெருந்தளத்தை மின்னாக்கி ஒளிவெள்ளத்தில் அமிழ்த்தியது.

மாலை 6.30 மணியைக் கடந்து விட்டிருந்த நேரம்.

தங்கள் இலக்கை நோக்கி அவர்கள் நகர்ந்து கொண்டிருந்தார்கள்.

வேவுப்புலி வீரர்கள் முன்னே, கரும்புலி வீரர்கள் பின்னே.

மாவிட்டபுரத்தையும் தெல்லிப்பளையையும் இணைக்கும் பிரதான வீதியும் தச்சன் காட்டி லிருந்து வந்து அதனைச் சந்திக்கும் குறுக்கு வீதியும் இராணுவச் சப்பாத்துக்களால் மிதிபட்டு பேச்சு மூச்சற்றுக் கிடந்தன.

வீதியோரமாக தச்சன்காட்டடியில் அணி நகர்ந்து கொண்டிருந்த சமயம்- அவதானமாக மிக அவதானமாக அவர்கள் ஊர்ந்து கொண்டிருந்தபோது-

திடீரென தெல்லிப்பளைப் பக்கமாகக் கேட்டது ட்ரக் வண்டிகளின் உறுமல்.

பயங்கர வேகத்தோடு அது நெருங்கிக் கொண்டிருந்தது.

நேராக மாவிட்டபுரம் பக்கம்தான் போகப் போறான் என நினைத்த வேளை தச்சன்காட்டுப் பக்கமாகவே திரும்பினான் வந்த வேகம் தணியாமலேயே.

நல்லகாலம்-

பளீரென அடித்த ஒளி வெள்ளத்தினுள் மூழ்கிப் போகாமல் பக்கத்திலிருந்த காணிக்குள் எல்லோரும் சமநேரத்தில் பாய்ந்து மறைந்து விட்டார்கள்.

அவர்களைக் கடந்து நேராகச் சென்று சந்திக் காவலரணடியில் நின்றவன் நின்றானா...? அந்த வேகத்திலேயே திரும்பி வந்தான்.

என்ன நாசமடாப்பா....? என நினைத்த வேளை ட்ரக் வண்டிகள் இரண்டும் அவர்களுக்கு நேர் முன்னே வந்து சடுதியாய்த் தரிக்க--

சில்லுகள் கிளப்பிய புழுதியோடு புற்றீசலாய்க் குதித்தனர் சிங்களப்படையினர்.

குழல் வாய்கள் தணலாக துப்பாக்கிகள் பேசத்துவங்கின. பொம்மருக்கென்று காவி வந்த நவரட்ணத்தின் 'லோ' ஒன்று ட்ரக் வண்டியைக் குறிவைத்து முழுங்கியது.

எல்லோரும் ஓடத் துவங்கினர். அது சண்டை போடக்கூடிய இடமல்ல. சண்டை பிடிப்பதற்குரிய நேரமுமல்ல-

அவர்கள் அங்கே போனது இதற்காகவுமில்லை.

எங்கே தவறு நடந்தது....? எங்காவது சுத்துச் சென்றிக்காரன் கண்டானோ....? டம்பி என்று நினைத்த பொயின்றிலிருந்து பார்த்துச் சொன்னானோ? எங்காவது வீடு உடைத்து சாமான் எடுக்க வந்த ஆமி கண்டு அறிவித்தானோ?

என்னவாகத்தான் இருந்தாலும் அவர்கள் சென்ற நோக்கம் கெட்டுவிட்டது.

தச்சன் காட்டில் நிகழ்ந்த அந்தத் துரதிர்ஷ்டம் தான், எங்களது தாக்குதல் திட்டத்தையே திசைமாற்றியது. திரு இல்லை. ரங்கன் இல்லை. புலிக்குட்டிக்கு என்ன நடந்ததென்று தெரியவில்லை. ராஜேஸ் ஒரு வழிகாட்டி. அவனையும் காணவில்லை.

எங்கள் தாக்குதலணி சேதாரப்பட்டுவிட்டது. ஏனையோர் ஒரு பக்கமாக ஓடியதால் சிதறாமல் ஒன்றாயினர். தாம் வந்த காரியத்தை உடனடியாக நிறைவேற்ற வேண்டிய தவிர்க்க முடியாத கட்டாயம் எழுந்துவிட்டதை எஞ்சியிருந்தவர்கள் உணர்ந்தனர். இந்தச் சண்டையோடு எதிரி உசாரடைந்துவிடுவான். கரும்புலி வீரர்கள் வேவுப்புலி வீரர்களை அவசரப்படுத்தினர்.

உடனடியாக எங்களை தாக்குதல் முனைக்குக் கூட்டிச் செல்லுங்கள்.

அடுத்த சில மணி நேரங்களின் பின் பொழுது நள்ளிரவை நெருங்கிக்கொண்டிருந்த சமயத்தில் அவர்கள் வான்படைத் தளத்தின் முட்கம்பி வேலிக்கருகில் தயாராகிக்கொண்டிருந்தனர்.

பிரதான கட்டளையகத்தோடு கெனடி தொடர்பு எடுத்தான். நடந்து முடிந்த துயரத்தை அவன் அறிவித்தான். 7 பேருக்கென வகுக்கப்பட்ட தாக்குதல் திட்டத்தில் எஞ்சியிருப்பது 4 பேர் மட்டுமே என்பதை அவன் தெரியப்படுத்தினான். எதிரி முழுமையாக உசார் அடைந்துவிட்டதால் இருக்கின்றவர்களுடன் உடனடியாக தாக்குதலை ஆரம்பிக்க வேண்டும் என்று வலியுறுத்தினான். தாமதிக்கின்ற ஒவ்வொரு நிமிடமும் இலக்குகள் தப்பிப் போக நாங்கள் வழங்குகின்ற சந்தர்ப்பங்கள் என்பதை விளக்கினான். தாக்குதலை நிகழ்த்தாமல் திரும்பி தப்பித்து வெளியேறு வதும் சாத்தியப்படாது என்பதையும் சொன்னான்.

அவனிடம் சற்று நேரம் அவகாசம் கேட்ட பிரதான கட்டளையகம் பிரத்தியேகமாக அமைக்கப்பட்டிருந்த இன்னொரு கட்டளையகத்தோடு கலந்து பேசியது. கெனடி சொல்வதே சரியானது எனவும் அதைவிட வேறு வழி இல்லையெனவும்பட்டது.

தாக்குதலுக்கு ஒப்புதல் வழங்கப்பட்டது.

முட்கம்பி வேலிகளை நறுக்கி, அறுத்து வேவுப்புலி வீரர்கள் பாதை எடுத்துக் கொடுக்க வான் தளத்தில் இலக்குகளைத் தேடி கரும்புலி வீரர்கள் உள்ளே நுழைந்தனர். அசோக்கிடமும் ரஞ்சனிடமும் விடைபெற்று அவர்கள் உள்ளே சென்றுவிட அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு இவர்கள் வெளியே திரும்பிக் கொண்டிருந்தனர்.

விடி சாம நேரம்--

படு இருள்.

மிகக் குறுகிய தூரத்திற்குள் தான் எதனையும் மங்கலாய்த்தன்னும் பார்க்க முடியும்.

மாவிட்டபுரத்திற்குப் பக்கத்தில் ஒரு குச்சொழுங்கையால் அவர்கள் திரும்பிக்கொண்டிருந்த போது--

ஒரே ஒரு மணித்துளி--

இருந்தாற் போல் அந்த இருளுக்குள் இருளாக அவர்களிற்கு முன்னால்

அதென்ன...? நிழலாக ஏதோ அசைவது போல உள்ளது!

ரஞ்சனின் கைகளைச் சுரண்டி மெதுவாக ஆமி நிக்கிறான் போல அசோக் சொல்லிமுடிக்கும் முன்-- தீப்பொறி கக்கிய சுடுகுழலிலிருந்து காற்றைக் கிழித்துச் சீறிய ரவைகள் அசோக்கின் தசை நார்களையும் கிழித்துச் சென்றன!

தலையோ கழுத்தோ நெஞ்சுப் பகுதியாகவும் இருக்கலாம் சரியாகத் தெரியவில்லை சன்னங்கள் பாய்ந்து சல்லடையாக்கிச் சென்றன.

"அம்..." முழுமையாக வெளிவராத குரலுடன் குப்புற வீழ்ந்தான் அந்த வீரன்.

அடுத்த நிமிடத்தில்--

கொஞ்சம் ரவைகளையும் ஒரு கைக்குண்டையும் பிரயோகித்து அசோக்கையும் பறிகொடுத்து விட்டு பக்கத்துக் காணிக்குள் பாய்ந்து ரஞ்சன் ஓடிக்கொண்டிருந்தான்.

முன்பொரு நாள்--

மயிலிட்டிப்பக்கமாக வேவுக்குச் சென்ற ஒரு இரவில் இராணுவம் முகாமிட்டிருக்கும் பாட சாலை ஒன்றை ரஞ்சனுக்குக் காட்டி அசோக் மனக்குமுறலோடு சொன்னானாம். இதுதான்ரா நான் படிச்ச பள்ளிக்கூடம். இண்டைக்கு இதில சிங்களவன் வந்து குடியிருக்கிறான் மச்சான் வீட்டுக்கு ஒரு ஆளெண்டாலும் போராட வந்தா இந்த இடமெல்லாத்தையும் நாங்கள் திருப்பி எடுக்கலாந்தானேடா.

ரஞ்சனது நெஞ்சுக்குள் இந்த நினைவு வந்து அசைந்தது.

தொடர்ந்து நகருவது ஆபத்தாயும் முடிந்து விடக்கூடும் என்பதால் அருகிலேயே ஒரு மறை விடம் தேடி அவன் பதுங்கிக்கொண்டான்.

இப்போது அவன் தனித்துப்போனான். கூட வந்த தோழர்கள் எல்லோரினதும் நினைவுகள் இதயமெல்லாம் நிறைந்து வாட்டின.

இனி எப்படியாவது அங்கிருந்து அவன் வெளியேற வேண்டும். வந்தவர்களில் எஞ்சியிருப்பது அவன் மட்டும்தான். நடந்தவற்றைப் போய்ச் சொல்வதற்காகவாவது அந்த மரணக்குகைக்குள் இருந்து அவன் பாதுகாப்பாகத் தப்பிக்க வேண்டும். எனவே அவன் இனி மிக அவதானமாக இருக்கவேண்டியது கட்டாயமாகின்றது.

மெல்ல விடிந்தது.

***சற்று உறுத்தலாக "ஒயா கவுத?" கேட்டுக்கொண்டே***
***துப்பாக்கியைத் தூக்கிக் கொண்டு அவன் எழ***
***ரஞ்சனின் கையில் இருந்த ரி 56 அவனுக்குப் பதில் சொல்லியது.***
***"நாங்கள் புலிகள்."***

அவன் தொடர்ந்து நகர்ந்து வெளியேற நினைத்த போது--

மின்னலென ஒரு யோசனை மூளைக்குள் பொறிதட்டியது.

தச்சன்காட்டில் யாராவது அதிஸ்டவசமாகத் தப்பியிருக்கலாம். அவர்கள் பாதை தெரியாமல் மாறுபட்டு வேவு வீரர்கள் திரும்பி வருவார்கள் என நம்பி, உள்ளே நுழைந்த முதல்நாள் இரவு அவர்கள் தங்கிய தரிப்பிடத்தில் போய் நிற்கக்கூடும்.

நப்பாசைதான். ஒரு மன உந்தலோடு அவன் போனான்.

அவன் அங்கே செல்ல... அங்கே...!

என்ன அதிசயம் அவன் நினைத்து வந்ததைப் போலவே அவர்கள்...

ஆனால் நால்வருமல்ல. ரங்கனும் புலிக்குட்டியும் மட்டும் நின்றார்கள். ராஜேஸ் இல்லை. திருவும் இல்லை. அவனைக் கண்டதும் அவர்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சி. போன உயிர் திரும்பி வந்தது போல என்பார்களே அப்படி ஒரு மகிழ்ச்சி. உடனே எங்களைக் கொண்டுபோய் கெனடி அண்ணனிட்ட விடு. இண்டைக்கு இரவுக்காவது அடிக்கலாம் என்று அவர்கள் அவசரப்படுத்திய போது--

ரஞ்சன் நடந்தவற்றைச் சொன்னான்.

அந்தக் கரும்புலி வீரர்களால் அதனைத் தாங்கமுடியவில்லை, தாங்கள் பங்கு கொள்ளாமல் அந்தத் தாக்குதல் நடந்து முடிந்ததை அவர்களால் நினைத்துப் பார்க்கக்கூட முடியவில்லை. தங்களது கைகளை மீறி எல்லாம் நடந்து முடிந்துவிட்டதை எண்ணி அவர்கள் மனம் புழுங்கினார்கள். - எல்லாம் முடிந்தது.

இனி நாங்கள் எப்படியாவது எந்தப் பிரச்சினையும் இல்லாமல் வெளியில் போய்விடவேண்டும் என்றான் ரங்கன். போகத்தானே வேண்டும், பிறகென்ன? ஆனால் ரங்கன் அதற்குக் காரணம் ஒன்றைச் சொன்னான்.

இதற்குள் நிற்கும்போது எங்களுக்கும் ஏதாவது நடந்தால் இயக்கம் எங்களையும் கரும்புலிகள் என்றுதான் அறிவிக்கும். அப்போது விமானங்களை அழித்தவர்கள் என்றுதானே அறிவிக்கும். அப்போது விமானங்களை அழித்தவர்கள் என்ற பெயர் தானே எங்களுக்கும்வரும். ஆனால் அவர்களுடைய தியாகத்தில் நாங்கள் குளிர்காயக்கூடாது. இதுதான் அவனுடைய மனநிலை.

மிகவும் பாதுகாப்பானது என்று கருதிய பாதை ஒன்றினால் வெளியேற அவர்கள் முடிவு செய் தனர். ரஞ்சன் வழிகாட்டினான். கூட்டிவந்த வேவு வீரர்களில் இப்போது எஞ்சியிருப்பது அவன் மட்டும்தான்.

பகற்பொழுது எனவே ஆகக்கூடிய அவதானத்துடன் அவர்கள் நகர்ந்து கொண்டிருந்தனர்.

மெல்ல மெல்லச் சூரியன் உச்சியை நோக்கி உயர்ந்து கொண்டிருந்தான்.

அப்போது அவர்கள் சீராவளைக்குப் பக்கத்தில் போய்க்கொண்டிருக்கிறார்கள்.

சரியாக நினைவில் இல்லை. ஒரு பதினொரு மணியிருக்கும்.

ஒரு பற்றைக்குள்ளிருந்து கவுத? என ஒரு குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்தால் ஒரு சிங்களப் படையாள் குந்திக்கொண்டிருந்தான். தங்களுடைய ஆட்கள் என்று நினைத்திருப்பான் போலும். என்ன பதிலைச் சொல்வது? அவர்கள் யோசிக்க அவனுக்குள் சந்தேகம் எழுந்துவிட்டது.

சற்று உறுத்தலாக ஒயா கவுத? கேட்டுக்கொண்டே துப்பாக்கியைத் தூக்கிக் கொண்டு அவன் எழ ரஞ்சனின் கையில் இருந்த ரி 56 அவனுக்குப் பதில் சொல்லியது.

நாங்கள் புலிகள்.

வெடித்தது சண்டை--

அவர்கள் ஓடத் துவங்கினர். மொய்த்துக் கொண்டு கலைத்தனர் சிங்களப் படையினர்.

கணிசமானதொரு தூர இடைவெளியில் அந்தக் கலைபாடு நடந்தது. பகைவனின் சன்னங்கள் அவர்களை முந்திக்கொண்டு சீறின.

திடீரென ரங்கன் கத்தினான். டேய் என்ர காலில வெடி கொளுவிற்றுதடா.. ஓடிக்கொண்டே பார்த்தார்கள். வலதுகால் என்பது தெரிகிறது. எந்த இடத்தில் என்பது தெரியவில்லை. அதைத் தெரிந்து கொள்வதால் எந்தப் பயனும் வந்துவிடப் போவதுமில்லை.. ரங்கன் ஓட ஓட அவனது காலிலிருந்து ரத்தம் தெறித்துக் கொண்டிருந்தது.

இவர்களால் எதுவுமே செய்ய முடியாது. எதனையும் செய்ய வேண்டுமென அவனும் எதிர்பார்க்கவும் இல்லை.

என்னால ஏலாதடா என்னைச் சுட்டுப் போட்டு நீங்கள் ஓடுங்கோடா ரங்கன் கத்தினான்.

அவன் ஓட முடியாமல் பின்தங்கிக் கொண்டிருந்தான். ரஞ்சன் சொன்னான் குப்பியைக் கடித்துக் கொண்டு 'சாஜ்ஜரை' இழு மச்சான்

'சாஜ்ஜர்' உடலோடு இணைக்கும் வெடிகுண்டு. தாக்குதலுக்குப் புறப்படும் போது கரும்புலி வீரர்களுக்கு வழங்கப்பட்டது. சண்டைக் களத்தில் எதிரியிடம் பிடிபடக்கூடிய சந்தர்ப்பம் வருமானால் ஆகக் கடைசி வழியாக அது அவர்களைக் காக்கும்.

ரங்கன் குப்பியைக் கடித்துக்கொண்டே சாஜ்ஜரின் பாதுகாப்பு ஊசியையும் இழுத்து எறிந்தான்.

மெல்ல மெல்ல அவன் பின்தங்கி விழ கலைத்துக்கொண்டு வந்த படையினர் அவனை நெருங்க

சாஜ்ஜரும் ரங்கனும் வெடித்துச் சிதறிய சத்தம் ஓடிக்கொண்டிருந்தவர்கள் காதில் விழுந்தது. திரும்பிப் பார்த்தார்கள் புகையும் அவனது உயிரும் தமிழீழத்தின் தென்றலோடு கலந்து கொண்டிருந்தன.

அந்தவெடி அதிர்ச்சியில் குழம்பித் தடுமாறி பகைவன் திரும்பவும் கலைக்கத் துவங்குமுன் அவர்கள் ஓடி மறைந்து விட்டார்கள்.

எங்கோ பதுங்கியிருந்து எல்லாம் அடங்கி இரவாகிய பின் மெல்ல மெல்ல நகர்ந்து வெளியில் வந்தனர் ரஞ்சனும் புலிக்குட்டியும்.

தச்சன்காட்டில் மாறுபட்டுக் காணாமற் போன ராஜேசும் ஐந்து நாட்களின் பின்னர் ஒரு வழியாக வந்து சேர்ந்தான்.

ஆனால் அசோக் வரவில்லை. ரங்கன் வரவில்லை திருவும் வரவேயில்லை.

நடு இரவு கடந்து போனது.

ஆகஸ்ட் 2ஆம் நாளின் ஆரம்ப மணித்துளிகள் சிந்திக்கொண்டிருந்தன. கெனடி பிரதான கட்டளையகத்துக்கு விபரத்தை அறிவித்தான்.

இப்போ நாங்கள் நான்கு பேர்தான் நிற்கின்றோம். ஜெயம், நவரட்ணம், திலகன் மற்றும் நான். நாங்கள் தாமதிக்க முடியாது. மற்றவர்களுக்கு என்ன நடந்தது என்பதும் தெரியாது. அவர்கள் வருவார்கள் என எதிர்பார்க்கவும் முடியாது. எனவே நாங்கள் நால்வரும் உள்ளே இறங்குகிறோம்.

எங்களால் முடிந்தளவிற்கு வெற்றிகரமாகச் செய்கிறோம்.

தச்சன்காட்டுச் சண்டையின் செய்தி எங்கும் பறந்தது.

அந்தப் பெருந்தளம் மயிர்களைச் சிலிர்த்துக் கொண்டு நிமிரும் ஒரு சிங்கத்தைப் போலத் துடித்தெழுந்தது.

ஆபத்து தங்களது வீட்டுக்குள்ளேயே நுழைந்துவிட்ட அச்சம் சிப்பாய்களைக் கவ்விக்கொண்டது.

சுடுகருவிகள் தயாராகின.

எந்த நேரத்திலும் எந்த முனையையும் உள்ளே நுழைந்த கரும்புலிகள் தாக்குவர் எனப் படைவீரர்கள் எச்சரிக்கப்பட்டனர்.

விமான ஓட்டிகள் வானூர்திகளில் ஏறி தயார் நிலையில் இருக்குமாறு பணிக்கப்பட்டனர்.

வான்படைத் தளத்தைப் பாதுகாக்கும் காவலரண்களும் வானூர்திகளுக்குரிய காவற் படையினரும் உசார் நிலையில் வைக்கப்பட்டனர்.

பாதுகாப்பு ஏற்பாடுகள் உச்சநிலைக்கு வந்து பரிபூரணமாக ஆயத்தமாகிய பகைவன் எதனையும் எதிர்கொள்ளத் தயாராகப் போர்க்கோலம் பூண்டுநின்ற வேளை--

யுத்த சன்னதர்களாகப் புறப்பட்டுச் சென்ற எங்கள் கரும்புலி வீரர்கள் சிங்கத்தின் சிலிர்த்து நின்ற பிடரி மயிர்களினூடு ஊர்ந்து அதன் முகத்தை நெருங்கினர்.

பிரதான கட்டளையகத்திலிருந்த வோக்கியில் கெனடி நிலைமையை விளக்கினான்.

நாங்கள் நல்லா கிட்ட நெருங்கிற்றம்.

ஏதாவது தெரிகிற மாதிரி நிற்குதா?

வேற ஒன்றும் இல்லையா?

அருகில் சின்னன் ஒன்று ஓடித்திரியுது.

நீங்கள் தேடிப் போன மற்றது தான்?

இங்க இருந்து பார்க்க எதுவும் தெரியேல்ல. தூரத்தில நிற்கக்கூடும். இறங்கினதற்குப் பிறகுதான் தேடக்கூடியதாக இருக்கும்.

இப்ப நீங்கள் இறங்கக்கூடிய மாதிரி நிக்கிறீங்களா?

ஓமோம் குண்டு எறியக்கூடிய தூரத்திற்கு வந்திட்டம். நீங்கள் சொன்னால் நாங்கள் அடிச்சுக் கொண்டிறங்கிறம்.

அப்படியெண்டால் நீங்கள் அப்படியே செய்யுங்கோ.

கட்டளையகம் அனுமதி வழங்கியது.

அதன் பிறகு என்ன நடந்திருக்கும்?

கெனடி உத்தரவிட்டிருப்பான்.

தாக்குதலை ஆரம்பியுங்கள்.

நவரட்ணத்தின் கையிலிருந்த 'லோ' முழங்க பெல் 212 இல் தீப்பற்றி எரியும்போது, கெனடி 'டொங்கா' னால் அடிக்க, திலகன் அதன் மீது கைக்குண்டை வீசியிருப்பான்.

அதே சம நேரத்தில் ஜெயத்தின் 'லோ' பவள் கவச வண்டியைக் குறிவைத்து முழங்கியிருக்கும். பலாலித் தளத்தின் மையமுகாம் அதிர்ந்திருக்கும்.

தங்களது அனைத்துக் கவசங்களையும் உடைத்து நுழைந்து பாதுகாக்கப்பட்ட அதியுயர் கேந்திரத்தையே கரும்புலிகள் தாக்கிவிட்டதை எதிரி கண்முன்னால் கண்டு திகைத்திருப்பான்.

சன்னங்களைச் சரமாரியாய் விசிறும் துப்பாக்கிகளோடு கூச்சலிட்டபடி பகைவன் குவிந்து வர கெனடியின் டொங்கான் எறிகணைகளைச் செலுத்தி இருக்கும்.

திலகனின் ரி.56 ஓய்வற்று இயங்கிக்கொண்டிருக்க, தங்களது அடுத்த இலக்குகளைத் தேடி அவர்கள் ஓடிக் கொண்டிருந்திருப்பார்கள்.

கெனடி. . கெனடி. . . நிலைமை என்ன மாதிரியெண்டு எங்களுக்குச் சொல்லுங்கோ.

ஒரு கெலியும் ஒரு பவளும் அடிச்சிருக்கிறம். ரெண்டும் பத்தி எரிஞ்சுகொண்டிருக்குது. கிட்டப் போக ஏலாம சுத்தி நிண்டு சுட்டுக் கொண்டிருக்கிறாங்கள்"

மற்றதுகள் என்னமாதிரி?

தொடர்ந்து அடிச்சுக்கொண்டு உள்ள இறங்கிக்கொண்டிருக்கிறம்.

பொம்மருகளைத் தேடுறம்.

ஆனால் 500 மீற்றருக்கு அகன்று 2600 மீற்றருக்கு நீண்டிருந்த விசாலமான ஓடு பாதை அது. மிகவும் தூரத்தில் நிறுத்திவைக்கப்பட்டிருந்த சியாமாசெட்டி குண்டு வீச்சு விமானங்களில் தயாராய் இருந்த ஓட்டிகள் அவற்றை மேலெடுத்து விட்டனர்.

கெனடியின் தொடர்பு நீண்ட நேரத்தின் பின் கிடைத்தது.

கெனடி நிலைமை எப்பிடி எண்டு சொல்லுங்கோ.

ஒரு கெலியும் ஒரு பவளும் அடிச்சிருக்கிறம். முழுசா எரிஞ்சு கொண்டிருக்கு "புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்".

கெனடி நீங்கள் அவசரப்படவேண்டாம். மற்ற ஆக்கள் என்னமாதிரி?

நானும் சுபாவும் நிக்கிறம்.

கெனடி நீங்கள் அவசரப்படாதேங்கோ தொடர்ந்து எதுவும் செய்யக்கூடிய மாதிரி இல்லையா?

அண்ணை எனக்கு ரெண்டு காலும் இல்லையண்ணை..."

புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்

புலிகளின் தாகம் .....தமிழீழ.....

கெனடி....கெனடி

திலகன்..... திலகன்....

கெனடி..... கெனடி....

ஒரு முதியவர் நீண்ட பெருமூச்சொன்றை விட்டுக்கொண்டு என்னடா தம்பி செய்கிறது வயசும் போகுது என்று கவலைப்பட்டபோது--

அருகில் 'ஈழநாதம்' நாளேட்டில் அவர்களின் படங்களைப் பார்த்து நின்ற அவரின் துணைவியார் ஏக்கத்தோடு சொன்னார்.

நீங்கள் வயசு போகுதெண்டு கவலைப்படுறியள் எத்தின பிள்ளையளுக்கு வயசு போறதேயில்லை.....!



தலைவர் அவர்களோடு முதற் கடற் கரும்புலி அங்கயற்கண்ணி

# கடலன்னையின் பெண் குழந்தை

16.08.1994

- கடற்கரும்புலி கப்டன் அங்கயற்கண்ணி



உயர உயர அலைகளை வீசி யெறியும் கடலுடன் நெருங்கிய நேசமான உறவை வைத்திருக்கும் அந்தக் கடற்கரை ஒரே வெண்மணல் பிரதேசம். சாதாரணமாக எந்த ஒரு இளம் பெண்ணுக்கும் இந்த வெண்மணற் பரப்பைப் பார்த்தால் தோழியருடன் ஓடிப் பிடித்து விளையாடத் தோன்றும். நீச்சல் பயிற்சியில் ஈடுபட வென கரைக்கு வந்த பெண் புலிகளின் மனம் ஏழைகளின் கண்ணீரில் இளகியது. அனுதாபத்துடன் அந்த மக்களின் நிலையைப் பற்றித் தமக்குள் பேசிக் கொண்டார்கள்.

அங்கயற்கண்ணியின் மனம் இறுகிப் பாறையானது.

"இவங்களுக்கு இதுக்கு ஒரு சரியான பதிலடி குடுக்கவேணும்."

அந்த நிமிடத்திலேயே மனதளவில் அவள் ஒரு கரும்புலியானாள். சிறீலங்காக் கடற்படையின் கப்பல் ஒன்றைக் கரும்புலித் தாக்குதல் மூலம் அழிக்கவேண்டும் என்ற எண்ணம் அப்போதுதான் அவளுள் ஆழ வேரோடியிருக்க வேணும்.



தொடர்ந்தும் எமது மக்கள் சிறீலங்காக் கடற்படையின் தாக்குதலுக்கு அஞ்சி, எல்லா வற்றையும் விட்டுவிட்டு ஓடி வருவதும், அன்று முழுவதும் (வருமானம் இல்லாததால்) ஒரு வேளைக் கஞ்சிகூடக் குடிக்க வழியில்லாமல் பசியுடன் அழும் தம்

குழந்தைகளை சமாதானம் பண்ணமுடியாமல் தமக்குள்ளேயே கண்ணீர்விடும் ஏழைத் தாய்களையும் ஏழைத் தந்தைகளையும் அடிக்கடி காண நேர்ந்தபோதெல்லாம், தான் எடுத்தமுடிவில் மேலும் உறுதி பெற்றாள் அவள்.

தான் ஒரு கரும்புலியாகிப் போக விரும்புவதைத் தலைவருக்குத் தெரியப்படுத்தினாள்.

சரியாக எட்டு மணித்தியாலமும் இருபத்தேழு நிமிடங்களும் அங்கயற்கண்ணி பதினேழு கடல் மைல்களை (ஏறத்தாழ முப்பத்தைந்து கிலோ மீற்றர்கள்) நீந்திக் கடந்து விட்டாள். பொறுப்பாளர்களுக்கு அவள்மேல் என்னவென்று சொல்ல முடியாத ஒரு பிரியம். கடற்கரும்புலிகளுக்குரிய பயிற்சியில் ஈடுபடத்தொடங்கிய நாளிலிருந்து அவள் அந்தக் கடுமையான பயிற்சிகளில் மிகத் திறமையாக ஈடுபட்டது எல்லோருக்குமே திருப்தியைத் தந்தது. கொடுக்கப்படும் இலக்கை அவளால் சரியாகத் தாக்கமுடியும் என்பதில் யாருக்குமே சந்தேகம் இருக்கவில்லை.

காங்கேசன்துறைத் துறைமுகத்தில் நாற்பத்தைந்து அடி ஆழங்கொண்ட நீர்ப் பரப்பில் நிலை கொண்டிருந்த வடபகுதித் தலைமையகக் கப்பலை யாராலுமே தாக்க முடியாது என்பதில் எந்தக் கடற்படை அதிகாரிக்குமே சந்தேகம் இருக்கவில்லை.

ஆறாயிரத்து முந்நூறு தொன் எடையைக் கொள்ளக் கூடியதும் 326.04 அடி நீளமும், 51.02 அடி அகலமும் கொண்டதும் அதி சக்தி வாய்ந்த ராடர்கள் பொருத்தப்பட்டதுமான நீரில் மிதக்கும், நடமாடும் தலைமையகக் கடற்படைக் கப்பலை ஒரு தனி மனிதனால் அழிக்கமுடியும் என்று அவர்கள் கனவில் கூட நினைத்திருக்கவில்லை என்பது பரிபூரண உண்மை.

கடற்புலிகள் மகளிர்படையணியின் மூன்றாவது பயிற்சிப் பாசறையில் பயிற்சி எடுத்த அங்கயற்கண்ணியிடம் இயல்பாகவே ஆளுமைத் தன்மை இருந்தது. ஆரம்பத்திலிருந்து அவள் குழுத் தலைவியாகவே இருந்து வந்தாள். கடற்புலிகளின் பெண் -ஆண் போராளிகளிடையே நடாத்தப்பட்ட போட்டி ஒன்றில் முதலாவதாக வந்தாள். விளையாட்டிலே கெட்டிக்காரியாக இருந்தாள்.

ஆனால் வீட்டிலிருக்கும் வரை இதற்கு நேர்மாறான இயல்பைக் கொண்டிருந்தாள். இரவிலே தனியாக வெளியே போகமாட்டாள். எதற்கும் அம்மாவின் துணை வேண்டும். அவளுக்கு என்று தான் ஒரு விடுதலைப்புலியாக வேண்டும் என்று எண்ணிப் புறப்பட்டாளோ அன்று அவளுள் மறைந்திருந்த ஆளுமை வெளிவந்தது.

லெப்.கேணல் பாமாவுக்கும், மேஜர் சுகன்யாவுக்கும் இவளை முழுமையாகத் தெரியும். அவர்கள் இருவருடனும் தான் அவள் நீண்ட காலம் நின்றிருக்கின்றாள். வரலாற்றுப் புகழ் மிக்க 'தவளை நடவடிக்கை' யின்போது இவள் லெப்.கேணல் பாமாவின் குழுவில் ஒருத்தியாக கடற் கண்காணிப்பில் ஈடுபட்டிருந்தாள். அவளது நடவடிக்கைகள், பண்புகள், எந்தப் பொறுப்பையுமே அவளிடம் நம்பிக் கொடுக்கலாம் என்ற நம்பிக்கையை எல்லோரிடமும் ஏற்படுத்தி விட்டிருந்தாள்.

இயக்கத்தோடு இணைந்த பின்னர் ஒருமுறை இவள் விடுமுறையிலே வீடு சென்றிருந்தாள். தாயும் தந்தையும் சகோதரர்களும் காட்டிய பாசத்திலே நனைந்தவள்,

நீங்களெல்லாரும் நல்லாப் படிக்கவேணும். படிச்சு முன்னுக்கு வரவேணும்,

என்றே தன் சகோதரர்களிடம் சொன்னாளாம்.

"நான் காத்தோடை காத்தாப் போயிடுவன் அம்மா."

என்று தாயிடம் சொன்னாளாம்.

எதற்காக தன் மகள் அப்படிச் சொன்னாள் என்பதை, தன் மகளை இழந்த பின்னர்தான் அந்த அன்பான அம்மாவால் புரிந்து கொள்ளமுடிந்தது.

"பருந்திட்ட இருந்து தன்ர குஞ்சுகளைத் தாய்க் கோழி காக்கிறமாதிரி வேலணையிலிருந்து நான் பத்திரமாகக் கூட்டி வந்த பிள்ளை".

என்று சொல்லிச் சொல்லி அழுது களைத்துவிட்டாள் அம்மா. எப்படித் தன் மகளால் இப்படியொரு சாதனையைச் செய்ய முடிந்தது என்று தன்னிடமே கேட்டுக் கொள்கின்றாள் அவள். சொந்தவீடு, வாசல் காணிகளை வேலணையில் சிங்கள இராணுவத்திடம் இழந்து ஏதிலியாக நிற்கும் அவளால், இரவிலே வெளியே போகும்போது மகளுக்குத் துணைபோன அவளால், தன் மகளின் வீரத்தை ஆச்சரியத்துடன் தான் பார்க்க முடிந்தது.

கரும்புலித் தாக்குதலுக்கான பயிற்சியில் ஈடுபட்டுக்கொண்டிருந்த போது தன் தோழிகளிடம்,

நான் நல்லூரில திருவிழா நடக்கிற நேரந்தான் சாகவேணும். அப்பதான் திருவிழாவில அம்மா கச்சான் வித்து வந்த காசு இருக்கும். அந்தக் காசு இருந்தாத்தான் என்ரை நினைவு நாளுக்கு வீட்டை போற பிள்ளைகளுக்கு (சகபெண் போராளிகளுக்கு) அம்மாவாலை சாப்பாடு குடுக்க

ஏலும். என்று அடிக்கடி சொல்வாளாம். அவளின் தோழிகள் ஒவ்வொருவரின் மனதிலும் அங்கயற்கண்ணியின் இந்த வசனம் கல்லிலே செதுக்கியது போலத் தெளிவாகப் பதிவாகியிருக்கின்றது. எத்தனை தரம் கேட்டாலும் அவர்கள் திருப்பித் திருப்பிச் சொல்கின்றார்கள்.

எல்லாம் தயார்.

கடற்புலிகள் மகளிர் படையணியின் சிறப்புத் தளபதி லெப்.கேணல் நளாயினி அவர்கள் அங்கயற்கண்ணியிடம்,

என்னம்மா ஏதாவது சொல்ல நினைக்கிறாயா? என்று கேட்டார்.

தயக்கமில்லாமல் மிகத் தெளிவாக அங்கயற்கண்ணியிடமிருந்து பதில் வந்தது.

உங்கட அன்பும், அண்ணையின்ர (தலைவரின்) அன்பும் எப்பவும் எனக்கு இருக்க வேணும்.

தாயை நேசிப்பதையும் விட அதற்கும் மேலாக தலைவரையும், தன்னை வளர்த்துவிட்ட பொறுப்பாளர்களையும், தாயகத்தையும் நேசிப்பவர்கள் தான் கரும்புலிகள்.

அங்கயற்கண்ணியை கடற்கரை வரை சிலர் வழியனுப்ப, அதன் பின்னரும் விடாது சில போராளிகள் அவளுடனேயே நீந்தி ஒரு குறிப்பிட்ட தூரம் வரை வழியனுப்ப, அதன் பின்னரும் இலக்கிலிருந்து ஒரு குறிப்பிட்ட தொலைவு வரை வந்து பிரியாவிடை கொடுத்தனர் சக போராளிகள்.

இலக்கை அடிக்காம நான் திரும்பமாட்டேன்.

என்று சொல்லி விட்டு அங்கயற்கண்ணி விடைபெற்றாள். தூரத்தே அவளது அசைவுகள் தெரியும் தூரம் வரை அதன் பின்னரும் கண்கள் வலிக்க வலிக்க வெறும் அலைகளை உற்றுப் பார்த்துக்கொண்டேயிருந்து விட்டு ஏனையவர்கள் திரும்பினார்கள்.

1994.08.16 அதிகாலை 12.35 மணியளவில், காத்துக்கொண்டிருந்த போராளிகளின் செவியில் பெரும் அதிர்வு. எத்தனையோ மைல்களுக்கு அப்பால் உறங்கிக் கொண்டிருந்த மக்களின் செவிகளிலே கூட அந்த ஓசை கேட்டதென்றால் காங்கேசன்துறையில் நின்றிருந்த இராணுவத்தினரைப் பற்றிச் சொல்லவா வேண்டும்?

எல்லோருக்குமே பரபரப்பு.

தமது கனவுக் கோட்டைகளில் ஒன்று தகர்ந்ததால் சிறீலங்கா இராணுவத் தலைமை பரபரப்படைந்தது.

ஆர் பெத்த பிள்ளையோ? எப்பதான் எங்களுக்கும் பிள்ளையளுக்கும் விடியப்போகுதோ?

என்ற ஆதங்கத்துடன் கண்கள் கலங்கியவாறு சுவரோடு சாய்ந்து அமர்ந்து விடியும்வரை விழித்திருந்தவர்களுமாய் மக்கள் பரபரப்படைந்தனர்.

"ரைட். கட்டளைக் கப்பல் அவுட்".

என்று உற்சாகத்துடன் கூறிக்கொண்டாலும் அங்கயற்கண்ணியின் நினைவு எல்லோர் மனங்களிலும் மோதியது. போராளிகள் பரபரப்டைந்தனர்.

சீறியெழுந்த அலையை அந்த இருட்டிலேயே மீண்டும் மீண்டும் உற்றுப் பார்த்தார்கள்.

என்னோடு கலந்துவிட்ட என் மகளை எதற்காக நீங்கள் வீணாகத் தேடுகின்றீர்கள்?

என்று தம்மைப் பார்த்துக் கேட்பது போன்று ஆர்ப்பரித்த கடலைப் பார்த்து, ஏன் நாங்களெல்லாம் உனக்குப் பிள்ளையள் இல்லையோ? ஏன் எங்களை மட்டும் விட்டிருக்கிறாய்?

என்று மனதுக்குள் கோபப்பட்டுக் கொண்டார்கள். ஆனால் அடுத்த நிமிடமே கோபம் மாறி 'எங்கள் தோழிகள், தோழர்களையெல்லாம் சுமக்கின்றவள் இவள்தானே' என்ற எண்ணமே மேலோங்கியது.

அங்கயற்கண்ணியின் நினைவு பாரமாய் அழுத்த கனத்த இதயங்களோடு திரும்பினார்கள். காங்கேசன்துறைக் கடற்பரப்பில் காற்றோடு கலந்த அங்கயற்கண்ணி ஒவ்வொரு போராளியினது குருதிச் சுற்றோட்டத்துடனும் கலந்து கொண்டாள்.

ஆழ் மனதிலே அழுத்தமாகப் பதிந்து கொண்டாள். இன்னும் இன்னும் கோடிக்கணக்கான நூற்றாண்டுகளுக்குப் பின்னரும் பேசப்படப் போகும் வரலாறாக ஆனாள்.

தீவுப்பகுதியைக் கைப்பற்றும் நோக்கில் சிறீலங்கா இராணுவம் எடுத்த நடவடிக்கையின் ஒரு கட்டமாக வேலணையை ஆக்கிரமிக்க முயன்றபோது, தாய்க்கோழி தன் குஞ்சுகளைப் பருந்திடமிருந்து பாதுகாக்க வேண்டித் தன் சிறகுகளை விரித்து குஞ்சுகளை மூடிக்கொண்டது. இன்று அந்தக் குஞ்சு பருந்தின் காலொன்றையே முறித்துப்போட்டு விட்டது.

இந்திய வல்லாதிக்கத்தால் கேணல் கிட்டு அவர்களும் அவரின் தோழர்களும் வீரச்சாவைத் தழுவிக் கொண்ட நாளில் தன்னை விடுதலைப்புலியாக்கியவள் தன்னையும் சரித்திரமாக்கினாள்.

# "நளாயினி படையணியின்" நாயகி



## கரும்புலி லெப்.கேணல் நளாயினி

தமிழ்த் தேசிய இனத்தினது அரசியல் சுபீட்சத்திற்கான, ஆயுதம் தாங்கிய போராட்டத்தின் வரலாறு என்பது தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கத்தின் வரலாறுதான்.

இந்தப் புதிய சரித்திரத்தின் கதாநாயகனாய் முன்னின்று, தலைவர் பிரபாகரன் அவர்கள், விடுதலைப் போராட்டத்தை நெறிப்படுத்தி நகர்த்திச் செல்கின்றார்.

தமிழீழ தனியரசை நோக்கிய இந்த நெடுவழிப்பாதையில், பெரிய பெரிய கனவுகளோடு அவர் பிரசவித்த குழந்தைகளில் ஒன்றுதான் விடுதலைப்புலிகளின் கடற்புலிகள்.

விடுதலைப் போராட்டம் முன்னெடுத்துச் செல்லப்படுகின்ற பிரதான பரிமாணங்களில் ஒன்றான கடற்புலிகள் அமைப்பானது, எங்கள் சரித்திர ஏட்டில் பொன் எழுத்துக்களால் பொறித்துவைக்கப்பட வேண்டிய ஒரு அத்தியாயமாக ஆகிவிட்டது.



வரலாற்றுத் தொடரோட்டத்தில், யுத்தம் ஊடறுத்துச் செல்லும் இன்றைய நாட்களைக் குறிக்கும் ஒரு காலத்தின் பதிவாகவும், கடற்புலிகள் மகிமையை

பெற்றுவிட்டனர். -சிறீலங்காவுக்கு எதிரான இரண்டாவது யுத்தத்தினூடு முன்னேறிச் சென்ற எங்கள் சுதந்திரப் போராட்டத்தை வளர்ச்சியின் இன்னொரு கட்டப் பரிணாமத்திற்கு உந்தித் தள்ளியவர்கள் கடற்புலிகள் என்றால், அது மிகையானதல்ல.

புரட்சியை அடிபணியச் செய்தல், அல்லது அழித்து ஒழித்து விடுதல் எனும் மூலோபாயத்துடன் தமிழீழத்தின் தொண்டைக்குழியை நெரிப்பதைப் பிரதான தந்திரோபாயமாகக் கொண்டு ஆகக் கடைசி வழியெனக் கருதி எதிரி வரைந்த போர்முறைத் திட்டமொன்றையும் எங்களது கடல் வேங்கைகள் தான் முறியடித்தனர்.

பொருத்தமானதாகவும், மிகச் சரியாகவும் கணிக்கப்பட்ட ஒரு காலகட்டத்தில், கடற்புலிகள் அமைப்புக்குப் புத்துயிர்ப்புக் கொடுத்து யுத்த அரங்கில் மேடை ஏற்றியதன் மூலம் யாழ்ப்பாண முற்றுகையை உடைத்தெறிந்ததுடன், வரலாற்றில் சிறப்பான இந்தப் பாத்திரத்தை வகிக்கும் சந்தர்ப்பத்தையும் அவர்களுக்கு வழங்கிய பெருமை தலைவர் அவர்களையே சாரும்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னைய தமிழர்களின் சரித்திரத்தில், சோழப் பேரரசன் ராஜராஜனின் கடற்படை அந்த மன்னனுக்கு வெற்றிகளைப் பெற்றுக் குவித்துத் தந்து வரலாற்றைப் படைத்தது.

இன்று-

தமிழினம் மீளவும் எழுச்சிகொண்டுள்ள சரித்திரத் திருப்பவேளையில், தமிழினப் பெருந் தலைவர் பிரபாகரனின் கடற்படை மீண்டுமோர் வரலாற்றைப் படைத்து முத்திரை பதித்து வருகின்றது.

இக்காலத்தில் படைக்கப்படுகின்ற இந்தப் புதிய சரித்திரத்தில் முன்னைய எக்காலத்திலுமே இல்லாததாக ஒரு வரலாற்று அபூர்வம் பிறப்பெடுத்துள்ளது.

அதுதான் கடற்புலிகளின் பெண்கள் படையணியாகும்.

கடலோடிப்போன ஆண் உறவுகளைத் தேடி கரைகளில் கண்ணீர் வடித்து நின்ற எங்கள் பெண்டிரை கடலேறிச் சென்று களமாட வைத்துப் புதியதோர் காவியம் படைக்கச் செய்தார் எங்கள் தலைவர்.

ஆரம்பத்தில் சிலர் நம்பிக்கையீனப்பட்டார்கள். கடலும் பெண்களும் சரிப்பட்டுவராத சமாச்சாரம் என்றார்கள். கடல்சார் நடவடிக்கைகளிலும், கடற்சண்டைகளிலும் மகளிரை ஈடுபடுத்துவது சாத்தியமில்லாத சங்கதி என்று கருத்துச் சொன்னார்கள்.

தலைவர் மட்டுமே தளராதிருந்தார்.

அவரது சிந்தனையோட்டத்தில் முளைவிட்ட செயற்திட்டங்களையெல்லாம் விடுதலைப்புலிகள் இயக்கம் வீரசாதனைகளாகப் படைத்த பழைய வரலாறுகளின்போது, வெளி ஆட்களுக்கு அவையெல்லாம் நம்புவதற்கரிய ஆச்சரியங்களாய்த் திகழ்ந்தன.

அவற்றைப் போன்றதொன்று தான் கடற்புலிகளின் மகளிர் படையணியுமாகும்.

தலைவரது ஆழ்மனக் குகைக்குள்ளிருந்து உதயசூரியனாகப் பிரகாசித்த எண்ணக் கருவைச் செயற்பாட்டுச் சாத்தியமாக்கி தளபதி சூசையின் தோளுக்குத் தோள் தந்து நின்று பாடுபட்டு மகளிர் கடலணியை வானுயரக் கட்டியெழுப்பிய அதன் முதற் சிறப்புத் தளபதிதான் லெப்ரினன்ற் கேணல் நளாயினி.

மகளிர் படையிலிருந்து கடற்புலிகளுக்கென வழங்கப்பட்ட 30 பேர் கொண்ட முதற் குழுவில் அவளோடு அங்கம் வகித்து, கடற்புலிகள் பெண்கள் படையணியின் மூலவேர்களுள் ஒன்றாக இயங்கி, அதனைத் திடகாத்திரத்தோடு வளர்த்தெடுக்க உரம்சேர்த்த இன்னொருத்திதான் மேஜர் மங்கை.

இந்துமாசமுத்திரத்தின் அலை மலைகளைத் தாவிக் கடந்து, தமிழீழப் பெண்ணினம் சாதனை படைக்கவென அல்லும் பகலும் அயராது உழைத்த அந்த மேனிகள், இப்போது ஓய்ந்து விட்டன.

புதிய வரலாற்றின் அத்தியாயங்களாக...... புதிய வழித்தடத்தின் சுவடுகளாக ......... புதிய மாற்றமொன்றின் திறவுகோல்களாக அவர்கள் கடற்தாயோடு கலந்துவிட்டார்கள்.

விண்மீன்களை வைத்துத் திசையறியச் சொன்னதிலிருந்து, கடலோடிச்சென்று களமாடக் கற்றது வரை, ஒன்றாகச் சோறு குழைத்து ஊட்டி வளர்த்தெடுத்து எம்மை ஆளாக்கிவிட்ட அந்த ஆசான்கள் ஆருயிர் நண்பிகள் அன்புக்கினிய எங்கள் தளபதிகள் இனி வரமாட்டார்கள்.

ஓயாது மூசிவந்து கரைகளில் மோதி அறையும் அலைகளைப்போல அவர்களது சுவடுகளில் ஆயிரமாயிரமாய் நாங்கள் தொடர்ந்து அணிவகுப்போம்.

கடற்புலிகளுக்கு வரும்போதே கரும்புலிகளாக வந்தவர்கள் அவர்கள். .... வந்ததன் பின்பு-

கரும்புலிக் காவியத்தைக் கடலிலேதான் படைக்கவேண்டும் என்பது ஒரு ஆக்ரோசமான வேட்கையாக அவர்களை ஆட்கொண்டது.

எதிரியை எதிர்கொண்ட ஒவ்வொரு கடற்சண்டைக் களத்திலும் மட்டுமல்ல,"சாகரவர்த்தனா" வைச் சாகடித்தும் அவர்கள் அதனைத்தான் சாதித்துப் போனார்கள்.

'ஒப்பரேசன் தவளை' க்குப் படையெடுக்கும் வேளையில் பாமா சொல்லிவிட்டுப் போனவைகள் நளாயினியின் ஆழ்மனக் குகையில் பசுமையாய்த் தேங்கிக் கிடந்தன.

"தரைச் சண்டைகளில் நாங்கள் திறமையாகச் செயற்படவேண்டும்தான். ஆனால் நாங்கள் கடற்சண்டைக்குரியவர்கள். நாங்கள் கடலிலே சாதிப்பது மட்டுமல்ல கடலிலேதான் சாகவும் வேண்டும். "யாழ்தேவி"யில் சுகன்யாவை இழந்தது எங்கள் துரதிர்ஷ்டம். எனவே நீங்கள் திறமையாகச் சண்டையிட்டு கவனமாகத் திரும்பி வாருங்கள்."

காவலரண் தொகுதி ஒன்றைத் தாக்கும் அணிக்குப் பொறுப்பாகச் சென்று வெடிபட்டு மருத்துவமனைக் கட்டிலில் சுயநினைவற்றுக் கிடந்து "பாமா...பாமா..." என்று நளாயினி கத்திக்கொண்டேயிருக்க பாமா எங்களைவிட்டும் அவளைவிட்டும் எட்டாத்தூரத்திற்குப் போய்விட்டாள்.

காங்கேசன்துறையில் கண்காணிப்பு நிர்வாகக் கப்பலைத் தகர்க்க கடற் கரும்புலிகள் புறப்பட்டுப் போனபோது தானும் போக முடியவில்லையே என்ற ஆதங்கம் "நளாயினிக்கு".

தன்னுடைய பிள்ளைகளுக்கு முன்பு தான் கரும்புலியாகப் போகவேண்டும் என்ற மன உணர்வோடு இருந்தவள்தானே அவள்.

திரும்பிவந்த தாக்குதல் அணிக்குள் அங்கயற்கண்ணி இல்லாததைக் காணநேர்கையில் அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.



*கடற்கரும்புலி மேஜர்*
**மங்கை**



*கடற்கரும்புலி கப்டன்*
**லக்ஷ்மன்**



*கடற்கரும்புலி கப்டன்*
**வாமன்**

நளாயினி உண்மையிலேயே வித்தியாசமானவள்தான்.

சிந்திப்பில் செயற்பாட்டில் சுறுசுறுப்பில் நினைத்ததைச் செய்து முடிக்கும் உழைப்பில் அவள் எங்களைவிட மேலோங்கித்தான் நின்றாள்.

ஒரு மிதிவண்டிதானும் இல்லாமலிருந்த ஆரம்ப நாட்களில், மங்கையும் அவளும் ஒழுங்கைக்கு ஒழுங்கை நடையாய் நடந்தார்கள்.

வீதிவீதியாகத் திரிந்து, வீடுவீடாகக் கருத்துச் சொல்லி, புதிது புதிதாகப் பிள்ளைகளைச் சேர்த்து, கடற்புலிகள் மகளிர் அணியை உறுதியான ஒரு அத்திவாரத்தின் மீது அவர்கள் கட்டியெழுப்பினார்கள்.

பெரியபெரிய கனவுகளெல்லாம் அவர்களது நெஞ்சுக் கூட்டுக்குள் புதைந்து கிடந்தன.

"ஆண் போராளிகளின் துணையின்றி கடலில் நாங்கள் தனிச்சு சண்டை பிடிக்க வேணும்."

தங்களது கனவுகளையெல்லாம் நனவாக்க அவர்கள் பட்டபாடு கொஞ்ச நஞ்சமல்ல.

நளாயினிக்கும் மங்கைக்கும் உள்ளே ஒரு வேட்கை குடிகொண்டிருந்ததை ஆரம்பத்திலிருந்தே நாங்கள் கண்டோம்.

"ஆண்போராளிகளுக்கு நிகராக அல்ல. அவர்களைவிட மிகையாக நாங்கள் செய்து காட்டவேண்டும், அவர்கள் சாதிப்பதைவிட அதிகமாக நாம் சாதிக்க வேண்டும்."

இந்த வைராக்கியம்தான் அவர்களுக்குள் இருந்து அவர்களை இயக்கியது. எங்களையும் இயக்குவித்தது.

தமது சொல்லாலும் செயலாலும் எப்போதும் எங்களுக்கு உறுதியூட்டிக்கொண்டே

இருந்தார்கள்.

அலை குமுறும், ஆர்ப்பரித்தெழும், கரைகளில் மூசி அடிக்கும். 'பெரிய கடலாக' இருந்த கடலைப்பார்த்து அச்சப்பட்டு நின்றோம் நாங்கள்.

ஒவ்வொருத்தராய்க் கடலில் இறக்கி மெல்ல மெல்லத் தவழவிட்டு, காலடித்து கையடித்து முக்குளித்து நிமிர்ந்த எங்களை திரும்பவும் தவழவிட்டு மீன்களுக்கு இணையான நீச்சல்காரர்களாக உருவாக்கிவிட்டவர்கள் அவர்கள்தான்.

உளம் தளராமல், மனம் குழம்பாமல் தனித்தனியாய்க்கூடக் கதைத்துத் தெளிவூட்டி, அன்போடு எங்களை அரவணைத்து நல்வழிப்படுத்திய தளபதி அவள். போகும் போதுகூட எங்கள் மனங்களில் எந்தச் சந்தேகத்தையும் அவள் கேள்விக்குறியாக விட்டுவிட்டுப் போகவில்லை.

பூவரசங்குளம் சண்டையில் சன்னங்கள் துளையிட்ட ஆழமான வடுக்களைத் தாங்கியதால் நிறைகுறைந்து போயிருந்தது அவளது மேனி.

எவ்வளவோ எல்லாம் சாதிக்கவேண்டும் என்ற அவளின் உணர்வின் வேகத்திற்கு, அந்தப் புண்பட்ட உடலால் ஈடுகொடுத்து இயங்க முடியவில்லை பாவம்.

என்றாலும் நளாயினி ஓய்ந்தாளில்லை. தன்னுடைய சக்திக்கு மீறியும் அவள் செயற்பட்டாள். உடலை வருத்தி, வருத்தித்தான் உழைத்தாள்.

கடற்புலிகள் மகளிர் படையணி குறுகிய காலத்தில் கண்ட இந்தப் பெருகிய வளர்ச்சியானது அதனுடைய அடிவேரில் தன்னுடைய உயிரையே உருக்கிவார்த்த அவளது உழைப்பின் பெறுபேறு என்றுதான் சொல்ல வேண்டும்.

மேற்கில்-

இந்துமாசமுத்திரத்தின் தொடுவானத்தைச் செவ்வானமாக்கிவிட்டு, சூரிய தேவன் ஆபிரிக்கா வுக்குப் போய்விடுகிற அந்திப்பொழுது.

கிழக்கு வானில் நிலவு நங்கை இரவு உணவுக்குப் புறப்படுவாள்.

வளர்பிறையாய்....தேய்பிறையாய்..... முழுநிலவாய் அவள் வருவாள். சில நாட்களில் வராமலும் விடுவதுண்டு.

ஆனால்-

நளாயினி கடலுக்கு வராமல் ஒரு நாளும் விடாள்.

60 நொட்ஸ் வேகத்தில் வீசும் கடற்காற்று சில்லிடும்.

நீர்ப்பதம் செறிந்த உவர்காற்றின் வருடலில் மேனி சிலிர்க்கும்.

அமைதியாக, அல்லது ஆர்ப்பரித்து அலைக்கரம் வீசி எங்கள் நீர் நங்கை நிலமகளோடு பாசம் பேசுவாள்.

உடலுறையும் அந்தக் குளிரில் நளாயினியும், மங்கையும் தோழிகளோடு கடலில் இறங்குவார்கள்.

பகலெல்லாம் எமக்குப் பயிற்சி தந்து ஓயாமல் இயங்குகின்ற அவர்கள், இரவான பின்னர்தான் எம்மை ஓய்வாக உறங்கவிட்டு தமக்காகப் பயிற்சி எடுக்கக் கடலுக்குப் போவார்கள்.

கடல்சார்ந்த எந்த அறிவும் இல்லாமல் தான் அவர்கள் கடற்புலிகளுக்கு வந்தார்கள். புதிய போராளிகளுக்குப் பயிற்சி வழங்கும் அதேவேளையில் கடலுக்கு அவர்களும் புதியவர்களே!

கனிந்து பழுத்த மீனவக் கிழவர்கள் கடலோரங்களில் குந்தியிருக்க, மெல்லக் கதை கொடுப்பாள் நளாயினி. பொக்கை வாய் திறந்து, தன் வீரதீரங்களைப் பேசத் தொடங்கும். கடல்பற்றி, கடலின் சுழிகளைப் பற்றி, நீரோட்டங்கள் பற்றி, நடுக்கடல் மர்மங்கள் பற்றி ஆழ்கடல் இரகசியங்கள் பற்றி கிழவர்களது முதிர்ந்த அறிவினை அவள் உறிஞ்சிக் கறப்பாள்.

பின்னர் அவற்றை எங்களுக்குப் பருகத் தருவாள்.

பிள்ளைகளுக்கு எதையும் சொல்லிக் கொடுக்க முன்னர் அதனை நாங்கள் தெரிந்திருக்க வேண்டும் என்று சொல்லுவதோடு நில்லாமல், அவர்கள் செய்யவும் முனைந்தார்கள்.

மீன்களை வெல்லவேண்டுமென்று நளாயினிக்கு ஆசை. திரண்ட அலைகளோடு போராடி அவள் வலிந்து நீந்துவாள். கைகள் சோரும். உடலியக்க சக்தியின் கொள்ளளவு குறையவும் அவள் தொடர்ந்து முன்னேறுவாள். கால்கள் சோரும். வலு இழந்த உடல், வலு நிறைந்த மனத்தோடு முரண்டு பிடிக்கும். மனந்தளராது நீந்திக் கடலலைகளை வெல்ல முயன்றும் முடியாமற்போய், உடல் துவண்டு களைத்தவளை நாங்கள்தான் கரைசேர்த்தோம் பலதடவைகள்.

அவள் பாவம். எவ்வளவு சுமைகளைத்தான் தனியொருத்தியாக அவள் தாங்குவாள்?

நிர்வாகத்தைக் கவனித்தாள். நிதியைக் கவனித்தாள். படைகளைக் கவனித்தாள். பயிற்சிகளையும் கவனித்தாள். அரசியலையும் கவனித்தாள். சண்டைகளையும் கவனித்தாள். எங்களது உணவைக் கவனித்து, உடைகளையும் கவனித்ததோடு ஒவ்வொரு பிள்ளையின் உள்ளத்தையும் கவனித்தாள்.

எல்லா இடங்களிலும் தானே நின்றாள். எல்லாப் பாரங்களையும் தானே சுமந்தாள்.

நளாயினியைப் பார்த்து நாங்களே பிரமித்திருக்கிறோம்.

எங்களது மகளிர் படையணி கடலில் வளர்ந்த ஒவ்வொரு துளிர்ப்பிலும் அவளது குருதியும் வியர்வையும்தான் கலந்திருக்கிறது.

அவளை எக்காலத்திலும் நாங்கள் மறக்கவே முடியாது.

பெண்கள் கடற்படையின் தோற்றமும் வளர்ச்சியும் அந்தத் தளபதியின் உயிரால் எழுதப்பட்ட வரலாறு.

வல்வெட்டித்துறையில் ஆறுமுகசாமி ஐயாவின் 8 செல்வங்களில் இவள் 6ஆவது குழந்தை.

ஐந்தாண்டுகளுக்கு முன்பு கல்விப் பொதுத்தராதர உயர் வகுப்பைப் பாதியில் நிறுத்தி விட்டு இயக்கத்திற்கு வந்தபோது பெரிய வசதிகளைத் தூக்கி எறிந்து விட்டுத்தான் அவள் புறப்பட்டாள்.

வீட்டுக்குப் போயிருந்த ஒரு பௌர்ணமி நாளில் முற்றத்தில் அம்மாவின் மடியில் தலைசாய்த்துப் படுத்திருந்த பிள்ளையை ஆசையோடு வருடிவிட்ட அன்னையிடம்-

அக்காவுக்குப் பத்து இலட்சம் கொடுத்து கல்யாணம் செய்து வைச்சனீங்கள்தானே அம்மா. எனக்கு ஐந்து இலட்சம் தாங்கோ இயக்கத்துக்குக் குடுக்க என்றாளாம்.

மிகச் சரியானவளாய் இனங்கண்டு கடற்புலிகளின் தொழில்நுட்பக் கல்லூரிக்கு மங்கையைப் பொறுப்பாக நியமித்தாள் நளாயினி.

சின்னப் பெண் குழந்தை. தத்தித் தவழ்ந்து மணல் அளைந்தது. அது வளர்ந்து பெரியவளாகிய பின்பு தரை உழுது, நெல் விதைத்து, உரம்போட்டு வயல் பார்த்து, அரிவி வெட்டி, சூடடித்து, மூடை கட்டி வீட்டுக்கு எடுத்து வந்து காசாக்குவதுவரை எல்லாவற்றையும் தானே செய்தது என்றால் எவரும் நம்பமாட்டார்கள்.

அப்படிப்பட்டவளின் கையில் தொழில் நுட்பக் கல்லூரி. நெல் மணிகள் குலுங்கும் வயல் சேனையாய் அது செழித்தது.

வடமராட்சியில் ஊரிக்காடு கிராமம். கணபதிப்பிள்ளை சோதி தம்பதிகளின் 9 குழந்தைகளில் இரண்டேபேர்தான் பையன்கள் கடைசித் தங்கைக்கு நேர் மேலே மங்கை.

குடும்பத்தின் வறுமை புத்திகூர்மையான அந்தக் குழந்தைக்கும் பக்கத்திலேயே இருந்த பள்ளிக்கூடத்திற்கும் இடையில் வேலிபோட்டது.

தளர்ந்து போகவில்லைத் மங்கை. அந்த இழப்பால் இளகிப் போகாமல் இறுகியது நெஞ்சம். குடும்பத்தின் துயரமும் அவளை உந்தித் தள்ளியது.

அவள் வெளியில் வந்தாள். ஊரவருக்கு நிகராக அன்னவளும் வயலில் இறங்கினாள். குடும்பத்தின் துன்பசிலுவைக்கு அந்தப் பெண்குழந்தையும் தோள் கொடுத்தது.

அவளது வியர்வை பாய்ந்து சேறாகி வயலில் செழித்துக் குலுங்கிய நெல் மணிகள் அக்காவொருத்தியின் திருமணத்தின்போது கழுத்தில் சங்கிலியாய் மின்னியதுமுண்டாம்.

இப்போது அதைச் சொல்லிச் சொல்லித்தான் அம்மா அழுகிறாள்.

ஊருக்குள் யாருக்கும் உதவியென்றால் ஓடோடிச் சென்று ஒத்தாசை புரிந்துகொண்டிருந்தவள், இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் நாட்டுக்காய்ப் போராடப் புறப்பட்டு வந்தாள்.

அரசியல் பணியில் மக்கள் அரங்கத்திலும், படையியல் பணியில் யுத்த அரங்கத்திலும் கடமையாற்றிய அந்த வீராங்கனையை கடற்புலிகளின் அணி அலைகளின் மடியில் களமாட அழைத்தது.

கடற்புலிகளின் ஆரம்ப நாட்களில் அரியாலையிலிருந்து அராலி வரையான கரையோரப் பிரதேசத்தில் மங்கைக்கு அரசியல் வேலை.

எங்கள் அன்புக்கினிய மக்களைப் பற்றியே அவள் எப்போதும் பேசிக்கொண்டிருந்தாள்.

அல்லற்படும் எம் மக்களது துன்பங்கள் தீரவேண்டும், துயரப்படும் எம் மக்கள் நிம்மதியோடு வாழவேண்டும். அடக்கப்பட்ட எம்மக்கள் சுதந்திரமாய் ஆளவேண்டும்.

ஆத்மார்த்தமான ஒரு தாகமாக அவளுக்குள் இவை ஊற்றெடுத்ததை நாங்கள் அறிவோம், இந்த உள்ளக்கிடக்கை சொல்லாகவும் செயலாகவும் அவளுக்குள்ளிருந்து வெளிப்பாடு கண்டது.

தட்டிக்கேட்க யாருமின்றி எம் மக்கள் நீட்டி நிமிர்ந்து படுக்கவேண்டுமானால் இம் மண்ணின் இளைய சந்ததி போராட்டத்தோடு அணி திரள வேண்டுமென்றாள். யுத்தத்தில் கலந்து அதனை விரைவாக வென்றெடுக்கச் சொன்னாள்.

படிப்படியாக மங்கை பெற்ற வளர்ச்சி, எங்களுக்கு அபாரமானதாகத் தெரிந்தது.

ஐந்து கடல் மைல்களை நீந்திக் கடந்து விட்டு வந்தவளுக்கு தலைவர் பரிசு வழங்கினார்.

ஆரம்பத்தில் எதுவும் தெரியாதவளாய் மற்றவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண்டு திரிந்தாள். நாளடைவில் எல்லாம் தெரிந்த அவளிடம் மற்றவர்கள் கேட்டுத் தெரிந்து கொண்டு திரிந்தார்கள். யுத்தப்புயல் கிளாலிக் கடற்பரப்பில் மையம் கொண்டிருந்த வரலாற்றுக் காலத்தில் அலைகிழித்து

விரைந்து பொறி கக்கிப் பகை விரட்டும் விசைப்படகுகளில் அவள் ஓட்டி, பின்பு சண்டைக்காரி, அடுத்து படகுத் தளபதி.

யாழ் நீரேரியிலிருந்து கடற் போர்க்களம் படிப்படியாக விரிவாக்கம் கண்டு, பெருங்கடலில் படர்ந்தபோது எழுந்த தேவையின் காரணமாக உகந்த வடிவங்களில் படகுகளை அமைக்கவென உருவாக்கப்பட்ட, படகுக் கட்டுமானத் தொழிற்சாலை மங்கையின் பணிப்பின் கீழ் இயங்கியது.

படகுகளின் வெளி இணைப்பு இயந்திரங்களைக் கையாளும் தொழில்நுட்பப் பிரிவிற்கும், மண்டைதீவிலிருந்து இழுத்து வந்த நீரூந்து விசைப்படகு 'ஒப்பறேசன் தவளை'க்குப் பிறகு 6 ஆக அதிகரித்தபோது படகுகளின் உள் இணைப்பு இயந்திரங்களைக் கையாளவென உருவாக்கப்பட்ட தொழில்நுட்பப் பிரிவிற்கும் மங்கைதான் பணிப்பாளர்.

மன உறுதி விடாமுயற்சி தன்னம்பிக்கை.

வகுப்பு எடுக்க ஆரம்பிக்கும்போது கரும்பலகையில் இப்படி எழுதித்தான் தொடங்குவாள்.

உயரத்திற்கு அவளை உயர்த்திச் சென்றதும் இவையேதான்.

ஒன்றாக நீந்தி, ஒன்றாகப் பயின்று ஒன்றாகப் படகோடி, ஒன்றாகக் களமாடிய தன் தளபதியோடு எங்கள் படையணியை வளர்த்தெடுக்க எப்போதும் துணைநின்ற அந்த வீராங்கனை இறுதிப் பயணத்திலும் நளாயினிக்குத் துணையாகவே போய்விட்டாள்.

நளாயினிக்கும் மங்கைக்கும் உள்ளே நீறுபூத்த நெருப்பாக ஒரு இலட்சியம் எப்போதும் கனன்று கொண்டே இருந்தது. ஒரு டோறா அடித்து மூழ்கடிக்க வேண்டுமென்று.

ஆனால் புவீந்திரனும் மணியரசனும் பருத்தித்துறையில் 'சுப்படோறா'வை நொருக்கிவிட இவர்களது குறி, அதிகரித்த ஆவேசத்தோடு பெரிய கப்பல்களில் மீது விழுந்தது.

ஒரு தரையிறங்கு கலத்தை அல்லது ஒரு கட்டளைக் கப்பலை இல்லாமல் போனால் ஒரு கண்காணிப்புக் கப்பலை, இப்படியாக ஏதோ ஒரு பெரிய இலக்கை அவர்கள் தேடியலைந்தார்கள்.

சமுத்திர அலைகளின் மீது அவர்கள் விரித்து வைத்திருந்த மரண வலைக்குள் சிலாபத்துறைக் கரையிலிருந்து 15 கடல்மைல் தூரத்தில் விழுந்து- சிக்கியது "சாகரவர்த்தனா".

தலையெடுக்கவிடாத தாக்குதல்

மரண அடி!

வளைத்துத் தாக்கிய சண்டைப் படகுகள். அதன் அசைவியக்கத்தைக் கட்டுப்படுத்த முயல இருண்ட வானில் சன்னங்களின் ஒளிக்கோடுகள்.

கிளாலி ஏரியில் எம்மக்கள் பார்த்த வர்ணஜாலங்கள், சிலாபத்துறைக் கடலில் அரங்கேறின.

வேகங்கொண்டன வெடிகுண்டுப் படகுகள்.

குறுக்கும் நெடுக்கும் பாய்ந்த சன்னங்கள் இலக்கை இனங்காண்பதில் சிக்கலைத் தோற்றுவித்தன.

சரியாகத் தெரியாவிட்டால் இடிபடுவது எங்கள் படகாய்ப் போய்விடும்.

விரையும் படகிலிருந்த நளாயினியின் குரல், உப்புக் காற்றில் அலைவரிசையாகி 'றாடர்' நிலையத்திலிருந்த 'வோக்கி'யில் ஒலித்தது.

"ரெண்டு பக்கமும் வெளிச்சம் தெரியுது. 'ற்ராக்கற் ' விளங்குதில்லை சரியான பாகையைச் சொல்லுங்கோ..."

திரும்பத்திரும்ப இதையே கேட்டுக் கொண்டிருந்தவளுக்கு துல்லியமான திசை வழியைக் கொடுத்துக் கொண்டேயிருந்தது "றாடர்" நிலையம்.

விசையைப் பெற்றது படகு.

40 நொட்சை கிட்டிய வேகம்.

அலைகள் அடிபணிந்தன.

'வோக்கி' ஒலித்தது.

ற்ராக்கற் தெரியுது.

நல்லா கிட்ட வந்திட்டம்

இடிக்கிறம்...

ஆவேசமான நெருக்கம்.

"புலிகளின் தாகம் தமிழீழத் தாயகம்"

மங்கையும், நளாயினியும்.

மின்னலின் பிரகாசிப்போடு அணியத்தில் மோதிய முழக்கம் கடலில் இரைந்து அடங்கு முன்னர்-

கடையாலில் விழுந்தது அடுத்த இடி!

அது லக்ஸ்மனும், வாமனும்.

ஒரு பக்கமாய்ச் சரிந்து மூழ்கிக் கொண்டிருந்த கப்பலின் மீது, தாவிப் பாய்ந்தனர் கடற்புலிகள்.

மூர்க்கத்தனமான தாக்குதல்!

துப்பாக்கிகளின் முரட்டுத்தனமான உறுமல்!

"பொங்கு தமிழுக்கு இன்னல் விளைந்தால் சங்காரம் நிசமென்று சங்கே முழங்கு"

செய்யுள் ஆக்கியவர் பாரதிதாசன்.

செய்து காட்டியவர் பிரபாகரன்.

கடலுக்குள் குதித்துக் கைகளைத் தூக்கியோரை, கப்பலில் எடுத்த பிப்ரி கலிபர்களோடு கரைக்குக் கொண்டுவந்தனர் கடற்புலிகள்.

ஒருவர் கப்பலின் தளபதி. அடுத்தவர் கப்பலின் துணைத் தளபதி.

போர்க்கைதியாய் உள்ள கொமாண்டர் சொன்னார்.

எனது 20 வருட படையியல் வாழ்வில் என்றுமே மறக்கமுடியாத நிகழ்வு, என் கண்களால் பார்த்த இந்தத் தற்கொடைத் தாக்குதல்தான்.

தலைவர் சொன்னார்-

சிறீலங்கா கடற்படையின் ஒரு கப்பற் தளபதியை, தமிழீழக் கடற்படையின் ஒரு பெண் தளபதி சிறைப்பிடித்தாள். அவர் உயிரைக் காக்க சரணடைந்தார். இவள் வெற்றியைப் பெற உயிர் துறந்தாள்.

1994.09.19 அன்று நள்ளிரவில் தயாரிக்கப்பட்ட திட்டத்தில் எந்தப் பிசகுமே இல்லாமல் செய்து பார்த்த பயிற்சிகளில் எந்த தவறுமே நேராமல் நளாயினியும் மங்கையும் இவர்களைத் தொடர்ந்து வாமனும் லக்சுமனும் மோதியதில் சாகரவர்த்தனா மூழ்கத் தொடங்கியது. நளாயினியையும் இன்னும் எண்ணற்ற வீரர்களையும் தன்னுடன் இணைத்துக் கொண்ட கடலன்னையின் அலைக்கரங்களிலே நீந்தி விளையாடிப் படகோட்டிப் பயிற்சிகள் செய்யும் அந்த வேகமான வீராங்கனைகள் யார்? தெரியவில்லையே? இன்னும் கொஞ்சம் கிட்டப் போய்ப் பார்ப்போமா, அட ***"நளாயினி படையணி."***

■ ■ ■

# இன்று விழுந்தாலும் நாளை எழுவோம்

கப்டன்



கட்டையான குண்டு உருவம். காற்று அடித்த பலூன் மாதிரி வெடித்து விடுவதுபோன்று வீங்கிய கன்னங்கள். மல்யுத்த வீரர்களுக்கு இருப்பது போன்று உருண்டையான கை, கால்கள். - இதுதான் நளாயினி.

இந்தப் பெரிய உடலையும் சுமந்து கொண்டு நளாயினி சாதித்தவைகள் ஏராளம்.

மிக வேகமான ஓட்டம். யாராலுமே நம்ப முடியாது. ஆனால் முதலாவது, இரண்டாவது, மூன்றாவதாகத்தான் ஓடி முடிப்பார். பெரிய உடலையும் தூக்கிக்கொண்டு தன் குண்டுக் கால்களை வீசி வீசி நளாயினி ஓடும் அழகைப் பார்த்து பயிற்சிப் பாசறையில் தோழிகள் இவருக்கு இட்ட பட்டப்பெயர் 'தவளைக்குட்டி'

எதையுமே ஏன் எதற்கு எப்படி? என்று தூண்டித் துருவி விசாரிப்பது இவரின் வழக்கம். எல்லாவற்றையும் விளங்கிக் கொள்ளவேண்டும் என்ற ஆர்வத்தில் எல்லோரையும் கேள்விகள் கேட்பதால் 'சயன்ரிஸ்ற்' என்ற அதிஉயர் விருதும் தோழிகளால் இவருக்கு வழங்கிக் கௌரவிக்கப்பட்டது.

வயதில் சின்னவர் என்பதாலும் துடியான இயல்பைக் கொண்டவர் என்பதாலும் மேஜர் சோதியாவுக்கு இவரில் நல்ல விருப்பம். இவரும் மேஜர் சோதியாவுடன் தாயிடம் பிள்ளை கதைப்பது போன்று செல்லமாகக் கதைப்பதுதான் வழக்கம்.

காட்டிலே நாம் வாழ்ந்த காலத்தில் திசையறி கருவிதான் எமக்குப் பாதைகளை இனங்கண்டு கொள்ளப் பெரிதும் உதவியது. ஒவ்வொரு அணியும் தன்னிடம் ஒரு திசையறிகருவியையாவது கட்டாயம் வைத்திருக்கும். காட்டுக்கு நளாயினி வந்த புதிதில் எல்லாப் போராளிகளும் காடு ஏதோ தமக்கு நன்கு பழகிய இடம்போல திசையறிகருவியுடன் போவதும் வருவதும் நளாயினிக்கு வியப்பை ஊட்டியது. தானும் அதுபோலப் போய் வரவேண்டும் என்ற ஆர்வம் தீவிரமாக

ஏற்பட்டுவிட்டது. தமக்குரிய பயிற்சிகள் ஆரம்பிக்கப்படமுன்னரே மூத்த போராளிகளிடம் திசையறிகருவிபற்றிய பூரணமான விளக்கத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டுவிட்டார். காட்டிலே நின்ற காலத்தில் திசையறி கருவிகளைப் பார்த்துப் பாதைகளைப் பிடித்துப் போவதில் ஒருமுறைகூட நளாயினி தவறியது கிடையாது. அதனால் தான் எந்த இரவிலும் எந்த நடுக் கடலிலும் நளாயினியால் தனது படகைச் சரியான பாதையில் செலுத்தமுடிந்தது.

1990ஆம் ஆண்டின் முற்பகுதி, விடுதலைப்புலிகள் மகளிர் அமைப்பு 'முன்னணி' என்ற பெயருடன் செயற்பட்ட ஆரம்பக்காலம். வவுனியா மாவட்டத்தில் அரசியல் வேலை செய்யவென விடப்பட்ட ஆறு பெண்போராளிகளுள் நளாயினியும் ஒருவர்.

ஒவ்வொருவருக்கும் மாறி மாறிச் சமையல் முறை வரும். நளாயினியின் சமையல்முறை நாளில் எல்லோருக்கும் கஸ்டகாலம். நளாயினி க்குச் சமைக்கவும் தெரியாது. தேநீர் தயாரிப்ப தாகக் கூறிக்கொண்டு கழிவு நீர்த் தண்ணீர் தயாரிப்பதுதான் நளாயினியின் வழக்கம். அன்று பார்த்து யாராவது வெளியாட்கள் வந்துவிட்டால் அவர்களின் நிலை விபரிக்க முடியாததாகிப் போய்விடும்.

தேநீரே இப்படியென்றால், சமையலைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. அறுசுவை என்று சொல்லப்படுகின்ற எல்லைக்கு அப்பாற்பட்டு புதுச் சுவையாக இருக்கும். மனித நாக்கின் சுவையுணர்மொட்டுகள் நளாயினியின் சமையலின் சுவையை இனங்காணமுயன்ற ஒவ்வொரு தடவையும் சமையலைச் சகிக்க முடியாத பொறுப்பாளர் நளாயினியைக் கூப்பிட்டு உன்ர ரேணுக்கு நீ சோறும் சம்பலும் மட்டும் செய் ராசாத்தி. நாங்க சந்தோசமாகச் சாப்பிட்டுவிட்டுப் போறம் என்று சொல்லிவிட்டார்.

அதன் பின்னர் அவர் தன்னுடைய சமையல் முறையன்று அடுப்பில் உலைப் பானையை ஏற்றிவிட்டு வீட்டின் பின்புறம் இருக்கும் உரலில் சம்பல் இடிக்கப் போய்விடுவார். நிறைய வேலை களைச் செய்யவேண்டும் என்றே எப்போதும் நினைக்கின்ற நளாயினி, ஏன் நேரத்தை வீணாக்க வேண்டும்? என்ற எண்ணத்தில் சுவரில் நிற்கும் பல்லியையும் எறும்பையும் பார்த்தவாறு சம்பலை இடித்து இடித்து,

"அன்பான தமிழீழ மக்களே, இந்தத் தமிழீழ விடுதலைப் போராட்டமானது...."

என்று தனது பேச்சுப் பயிற்சியை ஆரம்பித்து விடுவார். ஒருநாள் பின்புறம் யாரோ கதைக்கும் குரல் கேட்டதைக் கவனித்த ஒரு போராளி என்னவென்று எட்டிப் பார்த்துவிட்டு ஓடிப்போய் மற்றவர்களையும் கூட்டிக்கொண்டு வர....

ஐந்து பேர் மறைந்திருந்து தன்னைக் கவனிப்பதை அறியாத நளாயினி தொடர்ந்தும் சொற்பொழிவாற்றிக்கொண்டிருக்க....

இவர்கள் அடக்கமாட்டாமல் சிரித்து விட்டார்கள். திரும்பிப் பார்த்த நளாயினி வெட்கப்பட்டு என்னக்கா நீங்க?

என்று சிணுங்க அடுத்தமுறை நளாயினி இந்தமாதிரி ஏறுமாறாக ஏதாவது செய்யும் வரை சொல்லிச் சிரிப்பதற்கு அவர்களுக்கு ஒரு சுவையான செய்தி கிடைத்து விட்டது.

வவுனியாக் கோட்டத்தில் வேலை செய்த காலத்தில் நளாயினி வாங்காத தண்டனைகள் இல்லை. வெளியில் போய்விட்டு இரவு தளத்துக்கு வந்து முகம் கழுவாததற்கு இரவில் நிலத்தை கூட்டாமல் பாயை விரிக்காமல் படுப்பதற்கு காலையில் குளிக்காமல் வெளியில் புறப்படுவதற்கு, குளித்தாலும் உடைகளைத் தோய்க்காமல்-தோய்த்தாலும் கொடியில் விரிக்காமல்-விரித்தாலும் காய்ந்ததுடன் மடித்து வைக்காமல் என்று நீண்ட பட்டியல் ஒன்றையே தயாரிக்கலாம்.

ஒவ்வொரு நாளும் தன் மக்களிடம் போய் சமையலறையில் அம்மாமார்களுடன் அமர்ந்து அவர்களுக்கு வெங்காயம் உரித்துக் கொடுத்து தேங்காய் துருவிக்கொடுத்து ஐயாமார்களுடன் அமர்ந்து பழையதுகள் கதைத்து அரசியல் வேலை செய்து அந்த மக்களின் மனங்களில் தனக்கென ஒரு சிம்மாசனத்தைக் கட்டி எழுப்பியவர் நளாயினி. தளத்தில் இருக்கும் போது குழந்தை போலவே நடந்து கொள்வார்.

வவுனியா மாவட்டப் பொறுப்பாளராக நியமிக்கப்பட்ட பின் மதியம் 12.30 மணிக்கு எங்கிருந்தாலும் தன் தளத்துக்கு வந்து சேர்ந்துவிடுவார். பாடசாலை முடிந்து வரும் கீழ்ப்பிரிவு மாணவர்கள் நளாயினியின் தளத்தைத் தாண்டித்தான் செல்லவேண்டும். அவர்களின் கொப்பிகளை வாங்கிப் பார்த்து சரி பிழைகளை விளங்கப்படுத்தி முதல் நாள் பாடசாலைக்குப் போயிருக்காவிட்டால் அதற்குக் காரணம் கேட்டு ஆசிரியர்கள் ஒழுங்காகப் பாடங்களை நடத்துகின்றார்களா என்பதைக் கேட்டறிந்து பின்னர் மாணவர்களின் பெற்றோர்களுடனும் ஆசிரியர்களுடனும் அதைப் பற்றிக் கதைத்து முடிவெடுத்து, இது நளாயினியின் நாளாந்த நடவடிக்கைகளில் ஒன்று. வீதியில் போகும் சிறுமிகள், சிறுவர்கள் அழுக்காகப் போனால் வீதியிலேயே அவர்களை நிறுத்தி தன் கைக்குட்டையால் முகம் துடைத்துவிட்டு தன்சீப்பால் தலை

வாரிவிட்டு அவர்களின்உடை களைச் சீர்ப்படுத்தி அனுப்புவதில் நளாயினி என்றுமே பின்னின்றதில்லை.

அப்போதுதான் அந்தச் சண்டை நடந்தது. திடீரென முன்னேறிய சிறீலங்கா இராணுவம் கோழியாகுளத்திலிருந்த நளாயினியின் தளம்வரை வர நளாயினியின் துப்பாக்கி சீறியது. சிறிது நேரத்துக்குள்ளேயே ஏனைய போராளி அணிகளின் உதவியும் கிடைக்க அன்று நடந்த சண்டையில் இராணுவம் பின்வாங்கிவிட்டது.

ஆனால் அனுமதியில்லாமல் சண்டை பிடித்த தற்குத் தண்டனையாக நளாயினி பொறுப்பிலி ருந்து எடுக்கப்பட்டார்.

ஆனையிறவுத் தளம் மீதான தாக்குதலுக்காக விடுதலைப் புலிகள் மகளிர் படையணி தயாராகிக் கொண்டிருந்தது. அப்போது வவுனியா-பூவரசங்குளத்தில் வைத்து சிறீலங்கா இராணுவத்தை வழிமறித்துத் தாக்குவதெனத் திட்டம் தயாரிக்கப்பட்டது. ஆனையிறவு மீதான தாக்குதலுக்குத் தயாராகிக் கொண்டிருந்த போராளிகளில் ஒரு பகுதியினர் பூவரசங்குளத்துக்குப் புறப்பட்டனர். வவுனியாவின் ஒவ்வொரு மூலையும் தலைகீழ்ப் பாடம் என்பதால் நளாயினியும் தாக்குதலணியுடன் புறப்பட்டார்.

இந்த மோதலின் போது நளாயினி வயிற்றில் பலத்த காயமடைந்தார். காயமடைந்த நளாயினி யைத் தூக்கி அவரது ஆயுதங்களை அவரிடமிரு ந்து அப்புறப்படுத்திய பொழுது அவரது ரவைக் கூடுகள் எல்லாம் வெறுமையாக இருந்தன. கிரனைட்கூட எஞ்சியிருக்கவில்லை. எல்லாவற் றையுமே சண்டையில் பாவித்து விட்டார். ஏனென்றால் வவுனியாவின் தள அமைப்பைத் துல்லிய மாகத் தெரிந்த நளாயினி இராணுவம் தம்மை நோக்கி முன்னேறுவதற்கு வாய்ப்பாக இருக்கக்கூடிய ஒரு சின்ன இடைவெளியைக்கூட விடாமல் தனித்து நின்று ஒரு பக்கத்தில் சண்டை பிடித்திருந்தார். அவர் தாக்கிய பக்கத்திலிருந்து இராணுவம் முன்னே வரவேயில்லை.

காயமடைந்த நளாயினியைத் தூக்கிக் கொண்டு பின்னுக்கு வருவதற்கிடையில்,

எங்க எங்கட பிள்ளை?

நளாயினிக்குக் காயமாமே. என்னமாதிரி? என்று கேட்டவாறு வவுனியா மக்கள் சூழ்ந்து கொண்டார்கள். அந்த மக்களை விலக்கி, ........நளாயினிக்கு ஒன்றுமில்லை.

என்று பொய் சொல்லி நளாயினியை அந்த இடத்திலிருந்து கொண்டு வருவதற்குள் எல்லோ ரும் மிகவும் சிரமப்பட்டுத்தான் போனோம்.

தான் ஒரு கரும்புலியாகப் போக விரும்புவதாக நளாயினி தலைவருக்குக் கடிதம் எழுதினார். அந்த நேரம் விடுதலைப் புலிகளின் கடற்புலிகள் அமைப்பில் பெண் போராளிகள் இருக்கவில்லை.

"கணிசமான அளவு போராளிகளைக் கொண்ட அமைப்பாக கடற்புலிகள் மகளிர் படையணியை வளர்த்தபின் கரும்புலியாகப் போகலாம்" என்று கூறிய தலைவர் கடற்புலிகள் மகளிர் படையணியைக் கட்டி எழுப்பும் பொறுப்பை நளாயினியிடம் ஒப்படைத்தார். லெப்.கேணல் நளாயினி, மேஜர் சுகன்யா, மேஜர் மங்கை உட்பட முப்பது பெண் போராளிகளுடன் 1992.03.01 இல் "கடற்புலிகள் மகளிர் படையணி" தோற்றம் கொண்டது.

ஆரம்ப காலத்தில் வாகன வசதி ஒன்று மில்லை. நடந்து திரிந்தும் மிதிவண்டியில் திரிந்தும் இயக்கத்தோடு பெண்களை இணைத்தார்கள். இந்த முப்பது பேரும் பலதுறை சார்ந்த பிரிவுகளாகப் பிரிந்து எல்லாவற்றையும் கவனித்தார்கள். முப்பது பேரில் பத்துப் பேர் நீச்சற் பயிற்சிக்கென விடப்பட்டனர். அவர்களுள் நளாயினியும் ஒருவர். அந்தப் பத்துப் பேரும் ஒரு கடல் மைல் தூரத்தை நீந்திமுடித்தால் கடற்புலிகள் மகளிர் படையணிக்கென ஒரு வாகனம் தருவதாகச் சூசையண்ணை சொல்லிவிட்டார். அவர்கள் நீந்தவேண்டிய நாளும் வந்து விட பத்துப் பேரும் கடலுள் குதித்தார்கள். ஒன்பது பேர் நீந்தி முடித்துவிட்டார்கள். நளாயினியால் முடியவில்லை. வயிற்றுக் காயம் மிகுந்த வேதனையை உண்டாக்கியதால் நீந்தமுடியாமல் கரையேற நேர்ந்தது. அன்று முழுவதும் ஒரே அழுகைதான். காயத்தின் வேதனை குறையாதபோதும் மறுநாள் மீண்டும் நீந்தினார். ஒருகடல் மைலைக் கடக்காமல் கரையேறுவதில்லை என்ற உறுதியுடன் போய் நீந்திமுடித்துவிட்டார்.

அதன் பின்னர் நளாயினி சூசையண்ணையிடம் வாகனம் வாங்கியதும் பின்னர் பல கடல் மைல்களை நீந்திக் கடந்ததும் விசைப்படகுகளை ஓட்டும் வல்லமை பெற்றதும் மிக நீண்ட கதைகள்.

வோட்டர் ஜெட் எடுக்கவேணும். அவனை அடிச்சு அவன்ரை 50 கலிபர் எடுக்கவேணும் என்பது தான் நளாயினியின் தாரக மந்திரமாகிவிட்டிருந்தது. இந்த நேரத்தில்தான் பூநகரி இராணுவத் தளம் மீதான தாக்குதலுக்கு நாள் நிச்சயிக்கப்பட்டு அதற்கான பயிற்சிகள் நடைபெற்றுக்கொண்டிருந்தன. நளாயினியும் கடற்புலிகள் மகளிர் படையணியின் ஒரு அணியும் தரைச் சண்டைக்கான பயிற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர்.

பூநகரித் தளத்தின் மாதிரி அமைப்பைச் சூழ பெண்-ஆண் போராளி அணிகளின் பொறுப்பாளர் கள் தளபதி சொர்ணமண்ணை தாக்குதல் திட்டத்தைப் பற்றிச் சொல்வதை அவதானித்துக் கொண்டிருந்தார்கள். நளாயினி க்குத் தரைப்பகுதியில்தான் இலக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் நளாயினியின் கண்களோ நாகதேவன்துறைக் கடலில் நிறுத்தப்பட்டிருந்த விசைப் படகுகளை அவதானித்துவிட்டன.

"ஆய் வார்ட்டர் ஜெட் நிக்குது"

என்று தன்னை மறந்த நிலையில் நளாயினி சொல்ல எல்லோரும் நளாயினியையே திரும்பிப் பார்த்தார்கள். கண்களை அகல விரித்தவாறு மெய்மறந்து நின்ற நளாயினியை அருகிலுள்ள தோழிகள் தட்டித்தான் சுய நினைவுக்குக் கொண்டுவர வேண்டியிருந்தது. மாதிரி அமைப்பு விளக்கப்பட்ட பின்னர்,

நான் என்ரை பக்கத்தை அடிச்சுப் பிடிச்சு அப்பிடியே நடுவுக்குள்ளாலை அங்காலை போய் நாகதேவன்துறையையும் அடிச்சுப் பிடிச்சு அங்க நிக்கிற வோட்டர் ஜெட்டுகளையெல்லாம் எடுத்து காயப்பட்டாக்களை அதிலை ஏத்திக்கொண்டு போவன்.

தன் தோழிகளிடம் சொல்லிக் கொண்டு திரிந்தார். தனது குரலை அடிக் குரலில் மாற்றி வோக்கியில் கதைத்து தன்னுடைய குரல் கம்பீரமாக இருக்கின்றதா என்று தோழிகளிடம் கேட்பார்.

சண்டை ஆரம்பமானது. நள்ளிரவில் நடுக் கடலில் நட்சத்திரங்களைப் பார்த்து திசையறிந்து கரைசேருகின்ற நளாயினிக்கு அந்த இரவில் தனக்குக் கொடுக்கப்பட்ட இலக்கை இனங்கண்டு கொள்வதில் எந்தச் சிரமமுமே ஏற்படவில்லை. தனக்குக் கொடுக்கப்பட்ட அரண்களில் சிலவற் றைக் கைப்பற்றி அழித்து அந்த இடையூடாக உதவிக் குழுவை பிரதான தளத்துக்கு அனுப்ப வழிவகை செய்துவிட்டு தொடர்ந்தும் நடந்த சண்டையில் நளாயினி வயிற்றில் காயமடைந்தார். முன்னர் காயப்பட்ட அதே இடம் இம்முறை மிகமோசமாகப் பாதிப்புக்குள்ளானது. இரத்த உட்கசிவு ஏற்பட்டு ஆபத்தான நிலையில் இருந்தவர் பலத்த முயற்சிகளின் பின் பிழைத்தார். நிமிர்ந்து உட்காரமுடியாத நிலையில் வைத்தியசாலைக் கட்டிலில் படுத்திருந்தார்.

மாவீரர் நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. தன்னைத் துயிலுமில்லத்துக்கு போக அனுமதிக்குமாறு நச்சரித்துக் கொண்டேயிருந்தார். யாருமே பிடிகொடுக்கவில்லை. 1993.11.27 அன்று ஒருவருக்குமே சொல்லாமல் ஒரு காரை வாடகைக்குப் பிடித்துக் கொண்டு துயிலுமில்ல த்துக்குப் போய்ச் சேர்ந்து விட்டார். அனைத்துத் தளபதிகளும் பொறுப்பாளர்களும் நளாயினியைக் கோபத்துடன் ஏச,

நான் என்னெண்டு ஆஸ்பத்திரியிலை இருக்கிறது? கண்ணை மூடினாலும் துறந்தாலும் துயிலுமில்லந்தான் தெரியுது. நான் என்ன செய்ய?

என்று எல்லோரையும் சமாதானப்படுத்திவிட்டார். நளாயினியை ஓய்வாக இருக்கும்படி விட அவர் புறப்பட்டு தனது தளத்துக்கு வந்து சேர்ந்துவிட்டார். தான் நன்றாக ஓய்வெடுத்துக் கொண்டிருப்பதாக எல்லோருக்கும் சொல்லிக் கொண்டு நீச்சற் பயிற்சிகளிலும் படகோட்டும் பயிற்சிகளிலும் தொடர்ந்து ஈடுபட்டார்.

பூநகரித் தாக்குதலில் லெப்.கேணல் பாமா நீருந்து விசைப்படகைக் கைப்பற்றி வந்த பின்னர், அவன்ரை கப்பலொண்டைத் தாக்கவேணும் என்பதே நளாயினியின் கனவாகிப் போயிருந்தது.

கடற்புலிகளின் படைத்துறைப் பள்ளியில் ஒரு முறை விளையாட்டுப்போட்டி நடந்தது முடிய பொறுப்பாளர்களுக்கான அஞ்சலோட்டம் நடந்தது. பெண் போராளிகளின் பொறுப்பாளர்களும் , ஆண்போராளிகளின் பொறுப்பாளர்களும் ஓட ஆரம்பித்தார்கள். பெண் போராளிகளின் தரப்பில் நளாயினி முதலில் ஓட ஆரம்பித்தார். வயிற்றுக்காயம் வேகமான ஓட்டத்துக்குத் தடை போட்டது. ஆனாலும் விடாது ஓடி அடுத்தவரிடம் கோலை மாற்றிக் கொடுக்குமிடத்தை அடைய ஏறத்தாழ பத்து மீற்றர்களே இருக்கும்போது நளாயினி தடக்கிக் கீழே விழுந்துவிட்டார். எல்லோரும் கூக்குரலிட்டு விசில் அடித்தனர். ஆனால் நளாயினி உடனேயே எழும்பி ஓடிக் கோலை அடுத்தவரிடம் மாற்றிக் கொடுத்தார். அன்று பெண் போராளிகளின் அணி கடைசி யாகத்தான் வந்தது. எல்லோரும் நளாயினியைக் கேலி செய்தார்கள். அவர்களெல்லோருக்குமே நளாயினி சொன்ன பதில் இதுதான்.

“இண்டைக்கு விழுவம் நாளைக்கு எழும்புவம்.”

படைத்துறைப் பள்ளியின் ஆண்டு போராளிகளில் எட்டுப்பேர் ஐந்து கடல் மைல்களை நீந்திக் கடந்துவிட்டார்கள். அவர்களின் பொறுப்பாளர் பெண் போராளிகளின் பொறுப்பாளரிடம் வந்து,

உங்கட ஆக்களில ஒரு அஞ்சு பேரையாவது நீந்த வையுங்கோ இல்லாவிட்டால் மரியாதை இராது. என்று சொல்லிவிட்டுப் போக அதை அறிந்த நளாயினி வந்து பெண் போராளிகளின் பொறுப்பாளரிடம்,

பத்துப் பேரையாவது கட்டாயம் நீந்த வைக்கவேணும் பொம்பிளைப் பிள்ளையளாலை சாதிக்க ஏலும் எண்டது எல்லாருக்கும் தெரியவேணும்.

மறுநாள் படைத்துறைப் பள்ளியின் பெண் போராளிகள் நீந்தத் தொடங்கினார்கள். நளாயினி ஒரு படகில் ஏறி நீந்திக்கொண்டிருந்த ஒவ்வொரு போராளியின் அருகேயும் வந்து படகை நிறுத்தி

நீந்தி முடிக்கவேணும் என்னம்மா நல்லா நீந்தவேணும்.

என்று சொல்லிச் சொல்லி உற்சாகப்படுத்தினார். படகின் இயந்திரத்தை நிறுத்தி நிறுத்தி இயக்குவதிலுள்ள சிரமத்தையும் பாராது எல்லாப் பெண் போராளிகளையுமே ஐந்து கடல் மைல்களைக் கடக்க வைக்கவேண்டும் என்ற ஆர்வத்தில் வேகத்தில் அப்படிச் செய்தார். அன்று பத்தொன்பது பெண் போராளிகள் ஐந்து கடல் மைல்களை நீந்திக் கடந்தார்கள். அன்று முழுவதும் நளாயினியின் பாதங்கள் நிலத்தில் படவில்லை. அவ்வளவு உற்சாகம்.

எல்லாச் சின்னப் போராளிகளையும் கிட்டண்ணையின் நினைவுப் பூங்காவுக்குப் கூட்டி வந்து விளையாடவிட்டு அவர்கள் விளையாடுவதை ரசித்து அவர்களுக்கு ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுத்து அவர்கள் குடிப்பதை ரசித்து அவர்களைப் பற்றிப் பெருமைப்பட்டு...

"உங்களை நான் நேவியாகத்தான் பாக்கிறன்"

என்று தன் கனவை அடிக்கடி அவர்களிடம் சொல்லிச் சொல்லியே வளர்த்தார்.

தன் பிள்ளைகளுடன் பெரும்பாலும் ஒவ் வொரு நாளும் ஆறுதலாக இருந்து கதைப்பது நளாயினியின் வழக்கம். அப்படிக் கதைக்கும் நேரங்களில்,

“எங்களுக்கு அம்மா அப்பா எல்லாமே தலைவர்தான். அவர் சொல்லுறதையெல்லாம் நாங்ககேக்கவேணும்.”

பெண் போராளிகள் எப்போதுமே தங்கள் வேலைகளைத் தனித்துவமாகவும் திறமையாகவும் செய்யவேணும். கடற் சண்டைகளில் தொடர்ந்து ஈடுபடவேணும்.

இந்தக் கடல் எங்கட கடல். இந்தக் கடல்ல தான் நாங்க சாகவேணும்.

அண்ணைக்கு உங்களில சரியான நம்பிக்கை இருக்கு. அதுக்கேற்றமாதிரி நடந்து கொள்ள வேணும்.

என்றெல்லாம் சொல்லுவார். பிள்ளைகளைப் பாடச்சொல்லிக் கேட்பார். இல்லாவிட்டால் தானே தன் அடைத்த குரலில் பாடிக் காட்டுவார்.

பிள்ளைகளைத் தன்னைச் சுற்றி வட்டமாக அமரச் செய்துவிட்டு அவர்களுக்குச் சோறு குழைத்துக் கொடுப்பது நளாயினியின் நாளாந்த நடவடிக்கைகளில் ஒன்று. ஒருமுறை லெப்.கேணல் சாள்ஸ் தலைமையில் கனரக ஆயுதங்களை இயக்க வேகப் படகுகளை ஓட்ட நீச்சற் பயிற்சிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்த சமயத்தில் ஒரு முறை தவறுதலாக நளாயினியின் ஆட்கள் ஒரு கொள்கலனிலிருந்து மண்ணெய் கசிவதைக் கவனிக்காது விட்டதில் எண்ணெய் முழுதும் வெளியில் வழிந்து விட்டது. அதற்குத் தண்டனையாக குறிப்பிட்ட காலம் வரை இவர்களுக்கு காலை உணவு நிறுத்தப்பட்டு விட்டது. பயிற்சியோ மிகக் கடுமையானது. கடற்புலிகளின் வயிறோ கடலைவிட ஆழம் கூடியது. காலையில் சாப்பிடாமல் பயிற்சி எடுப்பது என்பது அவ்வளவு இலகுவானதாக இருக்கவில்லை. எப்போதடா மதியமாகும் என்று ஆவலுடன் காத்திருப்பார்கள்.

ஒரு நாள் பயிற்சி ஆசிரியர்கள் இவர்களுக்குரிய மதிய உணவை அனுப்ப மறந்து விட்டார்கள். இவர்களோ உணவுக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். நேரமோ மாலையை நெருங்கிக் கொண்டிருந்தது. எல்லோருடைய வாடிய முகங்களையும் பார்க்கச் சகிக்காத நளாயினி பயிற்சி ஆசிரியர்களிடம் போய்ச் சாப்பாட்டைக் கேட்டபோதுதான் அவர்களுக்கு ஞாபகம் வந்து சமையலறைக்குப் போய்ப் பார்த்தார்கள். சொற்ப அளவிலான உணவு தான் எஞ்சியிருந்தது.அதை வாங்கி வந்த நளாயினி எல்லோருக்கும் குழைத்துச் சாப்பிடக் கொடுத்து விட்டுத்தான் தான் சாப்பிட்டார்.

இப்படியெல்லாம் பழகுவதாலேயோ என்னவோ இவரை இடையிடையில் அம்மா என்றும் போராளிகள் கூப்பிடுவதுண்டு.

என்னோடை எப்படிப் பழக விரும்புகிறீர்களோ அப்பிடி நினைச்சுப் பழகுங்கோ என்றுதான் நளாயினியும் போராளிகளிடம் சொல்லுவார்.

கரும்புலித் தாக்குதலுக்கான கடும் பயிற்சியில் ஈடுபட்டுக்கொண்டிருந்தபோது தற்செயலாக விசைப்படகு ஒருமுறை கவிழ்ந்ததில் நளாயினியின் வயிற்றுக்காயம் பலமாகத் தாக்கப்பட்டது. தாங்கமுடியாத வேதனை ஏற்பட்டபோதிலும் சமாளித்துக் கொண்டு தொடர்ந்தும் பயிற்சியில் ஈடுபட்டார்.

கடுமையான பயிற்சியை ஆரம்பித்த நாளிலிருந்து நளாயினியின் கனவு நினைவெல்லாம் "சாகரவர்த்தன"வுடன் மோதும் கற்பனைதான். எந்த நேரமும் நான் அப்பிடிப்போய் இடிப்பன். நான் இப்பிடிப் போய் இடிப்பன் என்றே சொல்லிக் கொண்டிருப்பார். இருட்டில் தன் இலக்கைச் சரியாக

அடைய முடியாமல் தவறுதலாக வேறெங்காவது மோதி இலக்குத் தப்பிப் போகக்கூடாது என்பதில் எப்போதுமே நளாயினிக்குக் கவனம் இருந்தது. கடைசி நேரத்தில் ஏற்படும் பதட்டத்தால் தவறு நேராமல் தவிர்ப்பதற்காக எந்த நேரமும் சாகரவர்த்தனாவுடன் தன் படகு மோதும் காட்சியையே திருப்பி கற்பனை செய்து பார்த்துக் கொண்டார்.

இலக்குக்கு மிக அண்மையிலுள்ள ஒரு தரைப்பகுதி லெப்.கேணல் நளாயினி, மேஜர் மங்கை, கப்டன் லஷ்மன், கப்டன்,வாமன் உட்பட கடற்புலிகளின் பெண்-ஆண் போராளிகளைக் கொண்ட ஒரு அணி தயார் நிலையில் நின்றது. அங்கு நிற்கும் வரை சமையல் முறை ஒரு நாள் ஆண் போராளிகளுக்கும் மறுநாள் பெண் போராளிகளுக்கும் என மாறி மாறி வரும். பெண் போராளிகளின் சமையல் முறை என்றால் நளாயினிதான் மெயின் குக் சுவையாகச் சமைப்பவர்களுக்கு கன்டோஸ் வாங்கித் தருவதாக சூசையண்ணை சொல்லியிருந்ததால் போட்டியாகத்தான் சமையல் நடக்கும். சாப்பாட்டு நேரத்தில் வழக்கம்போல நளாயினி பெண் போராளிகள் எல்லாரையும் தன்னைச் சுற்றிவர இருத்தி சோறு குழைத்துக் கொடுத்து....

தன் படகு மோதி சாகரவர்த்தனா நீருள் மூழ்கத் தொடங்கியதும் எல்லோரும் சாப்பிட என்று இனிப்புகள் வாங்கிக் கொடுத்து....

1994.09.19 அன்று நள்ளிரவில் தயாரிக்கப்பட்ட திட்டத்தில் எந்தப் பிசகுமே இல்லாமல் செய்து பார்த்த பயிற்சிகளில் எந்தத் தவறுமே நேராமல் நளாயினியும் மங்கையும் இவர்களைத்தொடர்ந்து வாமனும் லக்சுமனும் மோதியதில் சாகரவத்தனா மூழ்கத் தொடங்கியது.

நளாயினியையும் இன்னும் எண்ணற்ற வீரர்களையும் தன்னுடனணைத்துக்கொண்ட கடலன்னையின் அலைக் கரங்களிலே நீந்தி விளையாடி படகோட்டிப் பயிற்சிகள் செய்யும் அந்த வேகமான வீராங்கனைகள் யார்? தெரியவில்லையே?

இன்னும் கொஞ்சம் கிட்டப் போய்ப் பார்ப்பபோமே, அட நளாயினி படையணி!

கற்பிட்டிக் கடலில் கடற்கரும்புலிகளால் தாக்கியழிக்கப்பட்ட 'சாகரவர்த்தனா' கட்டளைக் கப்பல்





கடற்கரும்புலி மேஜர்
**மங்கை**



கடற்கரும்புலி கப்டன்
**வாமன்**

# கற்பிட்டிக் கடலில் சிங்களக் கடற்படையின் கடலரசனை தாக்கியழித்த கடற்கரும்புலிகள்



"மங்கையக்கா இன்னும் இருந்து எங்களைப் போல போராளிகளை வளர்த்திருக்கலாம் என்று கவலை யாய்க் கிடக்கு" அந்தச் சின்னப் போராளி கூறினாள்.

கடற்புலிகள் மகளிர் படையணியின் அனேகமான போராளிகளுக்கு அவள் நீச்சல் பழக்கியிருந்தாள். இரவு பகல் பாராது பிள்ளைகளோடு ஒருத்தியாக மங்கை நிற்பாள். எங்கடை "மங்கை அக்கா எந்தக் கஷ்டமான பயிற்சிகளையும் தான் முன்மாதிரி யாகச் செய்து காட்டித்தான் எங்களைச் செய்யச் சொல்லுவா. எங்களுக்கு கஷ்டமாக இருந்தாலும் மங்கை அக்காவே செய்யிறா. எங்களால ஏலாதோ," என்று செய்து போடுவம்.

எப்போதுமே முன்மாதிரியான போராளியாகவே நாம் அவளைக் கண்டோம். பிள்ளைகள் நாலுமுப்பது

மணிக்கு நித்திரை விட்டு எழுந்தபோதெல்லாம் அவள் நாலு மணிக்கே எழுந்து விடுவாள். எந்தப் பிள்ளையும் நீந்தத் தெரியாமல் இருக்கக்கூடாது. குறைந்தது ஐந்து கடல் மைல்களாவது நீந்திப் பழகியிருக்க வேண்டும் என்பதில் அவள் உறுதியாக இருந்தாள்.

அதற்காக வெயிலென்றும் மழையென்றும் பாராது பிள்ளைகளுடன் நனைந்தும் காய்ந்தும் நின்றாள். பிள்ளைகளை நீந்தப் பழகுவதற்கென கடலில் இறக்கி விட்டு அலைகளில் நனைந்தபடி அவள் நிற்பாள். கால்கள் விறைத்தாலும் கண்கள் மட்டும் தூரத்தே புள்ளியாய்த் தெரியும் எதிரியின் விசைப்படகின் அசைவினைப் பார்த்தபடி நிற்கும்.

ஒரு முறை வடமராட்சி கிழக்குப் பிரதேசத்துக்கு மங்கை அலுவலாகச் சென்றிருந்தாள். அங்கிருந்து நான்கு படகுகள் இவர்களது பக்கம் வருவதாகச் செய்தி வந்தது. பிள்ளையள் நீந்துவதற்குப் போவார்களே, நான்கு படகுகளும் தாக்குதல்களை நிகழ்த்தலாம், பிள்ளைகள் கடலுக்குள் இறங்கினால் ஆபத்து. விடியுமுன்னரே அவள் சைக்கிளில் நீண்டமைல்கள் கடந்து கண்களில் சிவப்போடு வந்து சேர்ந்தாள். அவ்வளவு தூரம் ஒவ்வொரு போராளிகளையும் கண்ணுக்குள் வைத்துப் பேணினாள்.

போராளிகள் வீணாக இறக்கக் கூடாது. இந்தப் போராட்டத்தில் நிறையச் சாதிக்கவேணும் என்பதில் தீவிரமாக நின்றாள். ஒவ்வொரு போராளிக்கும் படகு எஞ்சின் உதிரிப் பாகங்களிலிருந்து படகு ஓட்டுவது வரை சகல துறைகளையும் கற்றுக் கொடுத்தாள். கட்டுமரம் ஓடப்பழக்கி குல்லா வலிக்கக் கற்றுக்கொடுத்தது வரை அவள் சாதித்தவை ஏராளம்.

கடலைப்பற்றித் தெரியாது. நீச்சல் பற்றி அடி தலை தெரியாது வந்த போராளிகளே அனேகம். ஐயோ நான் தாழப்போறன் எனக்குப் 'போசா' தாங்கோ என்று மூச்சுமுட்டி நிற்கும் போராளிகளுக்கெல்லாம் அண்ணையை (தலைவரை) நினைச்சுக் கொண்டு பயிற்சி எடுங்கோ. கஷ்டம் தெரியாது என்று நம்பிக்கையூட்டி தைரியமளித்து பிள்ளைகளோடு எப்போதும் தானும் ஒரு பயிற்சியாளராகவே நின்றாள். எப்போதும் தலைவரின் வளர்ப்புப் பற்றியும் போராட்டம் பற்றியும் சொல்லிச்சொல்லி வாழ்ந்த போராளி அவள்.

அவளது முதற்சண்டை ஆனையிறவு ஆகாய - கடல் - வெளித் தாக்குதலாக அமைந்தது. அதற்கு அவள் விநியோகக் குழுவில் ஒருத்தியாகச் சென்றாள். அந்தச் சண்டையில் தான் திரும்பி வருவேன் என்ற உறுதியோடு தான் சென்றாள். கையில் சிறிய காயத்தோடு வந்தவளிடம் நிறையக் கனவுகள் இருந்தன. கரும்புலியாய்ப் பாயவேணும் என்ற கனவையே நெஞ்செல்லாம் நிறைத்து அதற்காகவே தன்னைத் தயார்ப்படுத்தினாள்.

பூநகரிச் சண்டைக்கும் அவள் லெப்.கேணல் பாமாவுடன் சென்றாள். அலைகளில் நனைந்து நனைந்து படகோட்டியபடி கண்காணிப்பு படகின் ஓட்டியாக நின்றாள். லெப் கேணல் பாமா நீருந்து விசைப் படகை எடுக்கும்போது படகுக்கு ஒட்டியாக நின்று அதைக்கொண்டு வந்து சேர்த்து பெரிய வெற்றிப் பூரிப்போடு திரும்பவும் சென்றாள். எதிரியின் ஆயுதங்கள் அள்ளி 50 கலிபரின் தாங்கி கழற்றி இலக்குப்பிசகாமல் வந்து கரைசேர்ந்த அந்தச் சண்டையில் அவளது பங்கு கணிசமானது.

கடைசியாக கற்பிட்டிக் கடலில் கரும்புலியாய்ச் செல்வதற்கு முன் அவள் படகு துறைத் தொழில்நுட்பப் பிரிவுக்குப் பொறுப்பாக நின்றாள். ஒவ்வொரு போராளிக்கும் நுட்பமாக விளங்கப் படுத்தி உற்சாகமூட்டி தானே அருகிருந்து ஒவ்வொரு தேவைகளையும் கவனித்துச் சென்றாள். மங்கையக்கா தனக்கு என்ன தெரியாது எண்டாலும் எந்தப் போராளியிடமும் கேட்டு அறிஞ்சு கொள்ளுவா. எதையும் துருவித் துருவி நுட்பமாக கேட்டறிவது அவளிடம் எப்போதுமே இருந்தது. அப்படி எண்டா என்ன? இப்படிச் செய்தால் சரிவருமோ? என்று அவளுக்குப் புதிய புதிய நுட்பமான யோசனைகள் தோன்றும். அதனைச் செயலிற் காட்டும் போது மூக்கில் விரலைவைக்கத் தோன்றும்.

அங்கையற்கண்ணியின் தாக்குதலுக்குப் பின்னெல்லாம் அவளுக்குப் பொறுமை எல்லை கடந்துவிட்டது. எப்ப சந்தர்ப்பம் கிடைக்கும் என்று ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்தாள். மனம் சலித்து ஓய்ந்ததில்லை, அந்த இடைப்பட்ட கணங்களிலெல்லாம் இயலுமானவரை போராளி களுக்கு நீச்சல் பழக்கி, படகு ஓட்டப் பயிற்சி அளித்து அவற்றில் தன்னைத் தீவிரப்படுத்திக் கொண்டாள்.

கற்பிட்டித்தாக்குதலுக்கு நெஞ்சிலே சாவைச் சுமந்தபடி வாய் ஓயாமல் அண்ணையைப் பற்றியே கதைத்தபடி சென்றாள். இலக்குச் சரிவராவிட்டால் காட்டுக்குள்ளையே இருந்திடுவன் கரையில் நின்ற போராளிகளுக்கு கைகளை அசைத்தபடி சொன்னாளாம்.

இரவு 11.25 மணி உச்சி நிலவு பொங்கித் தணிந்தது. மன்னார் கற்பிட்டிக் கடலில் ஓயாத அலைச்சத்தத்தின் மத்தியில் கடலரசன் விரித்தபடி நின்றது. நளாயினி தலைமையில் மங்கையின் படகு மின்னலாய் உயரக்கிளம்பிய அலைகளை கிழித்தபடி முன்னே சென்று மோதி வெடித்தது. லக்ஸ்மனும், வாமனும் சென்றபடகு கப்பலின் அடுத்தபுறம் மோதிவெடிக்க கடலரசன் தீப்பற்றிய

படி கற்பிட்டிக் கடலடித்தளத்தோடு மெல்லமெல்ல தாழ்ந்துபோனது.

நான் வெடிச்சதன் பிறகு வீட்டிலை என்ரை உடுப்புகளோடை இருக்கிற மஞ்சள் சீலையை அம்மாவுக்கு உடுத்துவிடுங்கோ என்று கூறிச் சென்ற மங்கை சத்தமிட்ட கற்பிட்டிக் கடலலையோடு கரைந்து போனாள். பிள்ளைகள் திருந்துறதுக்குத் தானே அப்படிச் செய்தனான். கிச்சினிலை விடப்போறியளோ? அப்ப நல்லாப் பனங்காய்ப் பிட்டுச் செய்து சாப்பிடலாம் என்று கண்கள் விரிய வாயைச் சப்புக் கொட்டியபடி சொன்ன மங்கை வரவேயில்லை.

கண்கள் வலித்து மீண்டன. அவள் சிரித்தபடி.... சிதறிப்போன உடலைச் சுமந்தபடி அலைகுமுறி எழுந்தது.

■ ■ ■



கடற்கரும்புலி மேஜர்
வித்தி

வெற்றிலைக்கேணி கடற்பரப்பில்
இராணுவத் தளபாடங்களை
இறக்கிக் கொண்டிருந்த
தரையிறக்கும் போர்க் கப்பலைத்
தாக்கி, வீர சாதனை படைத்த
கடற்கரும்புலி

08-11-1994



# கரும்புலிகள்

"பகைவனே!
பகைவனே!
பருக்கையைத்
தட்டிப்பார்
கட்டிலுக்கு கீழே
கரும்புலி இருப்பான்"



2.8.1994 அன்று.
என்றும் போல் அன்றும்.
கதிரோன் எழுவான் திசையில் எழுந்தான்.
படுவான் கரையில் விழுந்தான்.
இரவு நகர்ந்து,
தாயகத்தை தலைமுதல் கால்வரை
போர்த்திவிட , அதிகாலை ஆரம்பமானது.
"பலாலி"
நீண்டகாலம் தமிழனின் பாதம் படியாத நிலம்.
சிங்களப்பாட்டுக் கேட்டு சினந்திருக்கும் மரங்கள்.
வீசும் காற்றில் கூட அந்நிய நெடி.
செம்பாட்டு மண்
பூமிபுத்திரர்களின் வருகைக்காக காத்திருந்தது.
பகைவனின் படைத்தளத்தில்
பாட்டும், கூத்தும் பரவிக் கிடந்தது.
முன்னணிக் காவலரணில்.....
அவர்களுக்கு முழு நம்பிக்கை.
எவன் நுழைவான் என்ற இறுமாப்பு.
நாளை.....
வசாவிளானுக்கு மாடு தேடி வருபவனையும்
கட்டுவனுக்கு வீடு பார்க்க வருபவனையும்
எப்படிக் கொல்லலாம்.
எங்கு எறிகணை வீசலாம்.
எவ்விடத்தில் குண்டுகள் போடலாம்.

பியர் அடிக்கும் உயர்மட்டப் பேச்சுக்கள் முடிந்து
அதிகாரிகள் நுளம்புவலைக்குள் நுழைய
விளக்குகள் நூருகின்றன.
யாரங்கே?
விமான ஓடு பாதைக்கு அருகிலும்
கட்டளைப் பணியகத்துக்குப் பக்கமாகவும்
மெல்ல, மெல்ல நகரும் இவர்கள் யார்?
"கரும்புலிகள்"
காற்று, புன்னகைத்தபடி பெயர்களை உச்சரிக்கிறது.
மேஜர் நிலவன்
மேஜர் ஜெயம்
மேஜர் திலகன்
கப்டன் திரு
கப்டன் நவரத்தினம்
லெப்டினண்ட் ரங்கன்
விரல் மடித்து எண்ணிவிட்டு
காற்று விசிலடித்தபடி நகர்கிறது
இருண்ட வானத்தில் வெள்ளியொன்று
இப்படிக் குரல் கொடுத்தது.
"வீரத்தின் வேர்களே! வெல்லுங்கள்
வழியனுப்பி வைத்த "வரலாறு" காத்திருக்கும்
புகுந்து விளையாடுங்கள்"
கட்டளைக்காக கரும்புலிகள் காத்திருந்தனர்.
"வோக்கிரோக்கி" உயிர்த்தது.
முதல்வெடி விழுந்தது.
கொல்லும் எமன் வாகனம்
"பெல்" உலங்குவானூர்தி எரிந்தது.
"பவள்" கவசவாகனம் சிதறியது.
எவர் என்னானாலும் எனக்கென்ன?
குண்டு வீச்சு விமானம் குடல் தெறிக்க ஓடியது.
ஆணவத்துக்கு அடிவிழுந்தது.
கரும்புலிகளுக்கு
எட்ட முடியாத சிகரங்கள் எதுவும் இல்லை.
தொட்டசைக்க முடியாத சுமைகள் இல்லை.
கரும்புலிகள்
வேர்களை வெட்ட மட்டுமல்ல...
ஆணிவேர்களையும் அறுக்கக் கூடியவர்கள்.
கரும்புலிகளே!
சாவுக்குமட்டும் ஒப்பாரி வைக்கும் உலகம்
உங்களை எப்படி உணர்ந்து கொள்ளும்
முரடர்கள் என்றே முடிவெடுக்கும்.
உங்களுக்கு இளகிய இதயம் என்று

